


ஸ்ரீ ஆறுமுக சுவாமி தரிசனம்.

உ
ஓம்
பரப்பிரஹ்மமணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்




தொகுதி 15 | பிரமோதூதஸு வைகாசிமீ கஉ | 1930ஸு மேமீ 14உ | பகுதி 11


## கடவுள் வணக்கம்.

எண்ணரிய பிறவிதனின் மானிடப் பிறவிதா
னியாதினும் அரிதரிது காண்
இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ
ஏதுவருமோ அறிகிலேன்
கண்ணகல் நிலத்துநான் உள்ளபொழு தேயருட்
ககனவட் டத்தில்நின்று
காலூன்றி நின்றுபொழி ஆனந்த முகிலொடு
கலந்துமதி யவசமுறவே
பண்ணுவது நன்மையிந் நிலைபதியு மட்டுமே
பதியா யிருந்ததேகப்
பவுரி குலையாமலே கௌரிகுண் டலியாயி
பண்ணவிதன் அருளினாலே
விண்ணிலவு மதியமுதம் ஒழியாது பொழியவே
வேண்டுவேன் உமதடிமை நான்
வேதாந்த சித்தாந்த சமரச நன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே. (1)

கன்னல் முக்கனி கண்டுதேன் சருக்கரை கலந்தது
என்ன முத்தியில் கலந்தவர்க்கு இன்பமா யிருக்கும்
நன்ன லத்தநின் நற்பதம் துணையென நம்பச்
சொன்ன வர்க்கொருல் ஆங்கைம்மாறு இல்லையென் சொல்வேன்.()

தேடும் திரவியமும் சேர்ந்தமணிப் பெட்டகமும்
கூட வருந்துணையோ கூறாய் பராபரமே (3)

# அரும்பொருள் விளக்கம்

(1) இதனால் தாயுமான அடிகள் இரண்டறக் கலக்கும் ஆனந்த நிலையைப் பெறும்வரை உடல் இருக்கவேண்டும் என்றும், கௌரி தேவியின் அருளால் மதியமிர்தம் இடையறாது பொழிந்து கொண்டே இருக்கவேண்டும் என்றும் சித்தர்கணத்தை வேண்டுகின்றார்.

(இ-ள்.) வேதாந்த—சித்தாந்தங்களின் முடிவாகிய நல்ல சமரச நிலைமை கைவரப் பெற்று விளங்கும் ஞானச் சித்தர்கணமே! ஒரு விண்ணப்பம். எண்ணற்ற—எத்தனையோ பிறவிகளுக்குப் பிறகு இம்மானிடப் பிறவி வாய்த்திருக்கிறது. இப்பிறவி கிடைப்பது மிகமிக அருமை. இது தவறி விட்டால் இனிக் கிடைப்பது எப்பிறவியோ—அல்லது எத்தகைய வேதனைகளோ? யாருக்குத் தெரியும்? எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. ஆதலால் பரந்து விரிந்த இந்த உலகத்தில் நான் உடலோடு கூடியிருக்கும் பொழுதே திருவருளாகிய வானவெளியில் நிலைத்துக் காலூன்றி நின்று இன்பமழையைப் பொழியும்படியான பரப்பிரம மேகத்துடன் கலந்து என் அறிவு பரவசம் அடையுமாறு செய்வது நலமாகும். இந்த நிலையில் அழுந்துகிறவரை எனக்கு இடமாயிருந்த தேகமாகிய பவுரிக்கூத்துக் கலையாமல் கௌரி—மதியமிர்தம் குண்டலி அம்மை—தேவியின் திருவருளால் ஞான ஆகாயத்தில் விளங்கும் இடையறாது பொழிந்து கொண்டிருக்க, உங்களுடைய அடிமையாகிய நான் பிரார்த்திக்கின்றேன் என்க.

உலகில் எத்தனையோ உயிர்கள் உண்டு. இவ்வுயிர்கட்கு எல்லாம் காரண காரிய உணர்ச்சியாகிய பகுத்தறிவு இல்லை. மக்கட்கே ஆறுவது அறிவாகிய பகுத்தறிவு உண்டு; ஆதலின் "எண்ணரிய பிறவிதனில் மானிடப் பிறவிதான் யாதினும் அரிதரிது காண்" என்றார்.

கண் அகல்—இடம் அகன்ற அதாவது பரந்து விரிந்த. அருட் ககன வட்டம்—சிதாகாச மண்டலம். ஆனந்த முகில்—பரப்பிரமம். பவுரி—கூத்து வகைகளில் ஒன்று. கௌரி, குண்டலியாயி, பண்ணவி என்பன சத்தியின் திருநாமங்கள்.

(2) இதனால் இறைவனுடைய திருவடிக் கமலங்களைத் துணையாக நம்பச் செய்த ஞானாசாரியருக்கு என்ன கைம்மாறு செய்வேன் என்று கூறுகிறார்.

(இ-ள்) கருப்பஞ்சாறும், மா, பலா, வாழை என்னும் முக்கனியும், கற்கண்டும், தேனும், சருக்கரையும் கலந்ததற்கு நிகராகிய மேலான வீட்டிற் கலந்தவர்க்கு இன்பமாய் விளங்கும் நல்லெழில் பொருந்திய தேவரீரின் திவ்விய திருவடிகளே துணை என்று நம்பும்படி உபதேசித்தருளிய அறிஞர்கட்கு நான் செய்யக்கூடிய பிரதியுபகாரம் எந்நாளும் இல்லை. அவ் அறிஞரின் பெருமையை என்னென்று கூறுவேன்? என்பதாம்.

கன்னல்—கரும்பு. கண்டு—கற்கண்டு. கைம்மாறு—பிரதியுபகாரம்.

(3) இதனால் இறக்கும்போது ஒன்றையும் கொண்டு போவதில்லை என்பதைக் கூறுகின்றார்.

(இ-ள்) பராபரமே! கஷ்டப்பட்டுச் சம்பாதிக்கும் பொருளும், சேர்த்து வைத்திருக்கிற நவரத்தினப் பெட்டியும் சாங்காலத்தில் கூட வரத் தக்க துணைகளோ சொல்வாயாக என்பதாம்.




## மாணவர்க்கு ஒரு வேண்டுகோள்

மாணவர்க்கு இது கலாசாலை விடுமுறைக் காலம். இந்தக் காலத்தை எவ்வாறு உபயோகிக்கவேண்டும் என்பதை ஒவ்வொரு மாணவ நண்பரும் சிந்திக்கவேண்டும். நமது நாடு சுதந்தரம் இழந்து அடிமைக் குழியில் ஆழ்ந்து கிடக்கிறது. அரசியல் விஷயத்தில் மாத்திரமா?—சமூக விஷயத்திலும் அடிமையாகவே இருந்து வருகிறது. இந்நிலையில் பாரத அன்னையின் மானத்தைக் காக்கத் திறமையுள்ள மாணவ மைந்தர்கள் எல்லாரும் முன்னணியில் வந்து நிற்கவேண்டும்.

முப்பத்து முக்கோடி ஏழைமக்களின் வறுமைப் பிணியையும்—அறியாமையையும் நீக்க காந்தியடிகள் அறப்போர் தொடங்கிவிட்டார். அது நாடெங்கும் நாள்தோறும் காட்டுத் தீப்போல் பரவிவருகிறது. பெரிய பெரிய தலைவர்களும் தொண்டர்களும் சிறைக்கோட்டங்களுக்குச் சென்ற வண்ணமா யிருக்கின்றனர்.

இந்த அறப்போரில் கலந்து கொள்ளும் விஷயத்தில் அநேக மாணவர்களுக்கு அசாத்தியமா யிருக்கலாம். இவர்கள் எல்லாரையும் சமூக சீர்திருத்த விஷயத்தில் முனைந்து தொண்டாற்ற முற்படுமாறு வேண்டுகின்றோம்.

நமது நாட்டில் பட்டதாரிகளுக்குப் பஞ்சம் இல்லை. ஆண்டுதோறும் ஆயிரக்கணக்காக வெளியில் வருகின்றார்கள். எங்கு திரும்பினும் பட்டம் பெற்ற எவரையும் சந்திக்காமல் இருக்க முடியாது. இக்காலக் கல்வியின் பயனற்ற தன்மையை அநேக அறிஞர் ஓயாமல் கூறியும் எழுதியும் வருகின்றனர். நமது நாட்டு வறுமை நிலையைப் போக்குவதற்கு இக்காலக் கல்விமுறை ஒரு சிறிதும் பயன்படுவதில்லை. கொஞ்சம் பொருள் உள்ளவர்கள் வக்கீல்களாகவோ

---

டாக்டர்களாகவோ வருகிறார்கள். ஏனையோர் குமாஸ்தா வேலையில் போட்டி போடுகின்றனர். நாடு முழுவதும் வக்கீல்களும், டாக்டர்களும், குமாஸ்தாக்களும் நிறைந்து விடுவதால் வரும் பயன் என்னை? இதர உத்தியோகங்களும் எத்தனை பேர்களைத் தாங்கிவிடும்? எனவே வேலையில்லாத் திண்டாட்டம் அநேக கஷ்ட நஷ்டங்களுடன் படித்துத் தேர்ச்சி பெற்றவர்களுக்கு ஏமாற்றத்தையும் துன்பத்தையும் உண்டாக்கி வருகின்றது.

நிற்க, கிராமாந்தரங்களிலிருந்து ஆங்கிலக் கல்வி பயில்வதற்கென்று நகரங்களுக்கு வரும் மாணவர்கள் பெரும்பாலும் இரண்டுங்கெட்ட நிலைமை அடைந்து விடுவதை நடைமுறையில் கண்டு வருகின்றோம். நகரங்களில் அடியெடுத்து வைத்தவுடன் அவர்களுக்குக் கிராமங்கள் வேப்பங்காயாகக் கசந்து விடுகின்றன—வெளி வேஷ—நகர நாகரிக அலங்காரங்களில் மயங்கி வீழ்ந்து விடுகின்றனர். விவசாயம் அநாகரிகத் தொழிலாகத் தோன்றி விடுகின்றது. கல்வியிலும் அரைகுறையாகத் திரும்பிவிடுகின்றனர். இதுதானா கல்வியினாலாய விழுமிய பயன் ?

பொதுவாகத் தற்கால ஆங்கிலக் கல்விமுறை நாட்டு மக்களின் கஷ்டங்களை நீக்க ஒரு சிறிதும் பயன் படுவதில்லை என்பது எல்லாரும் ஒப்புக்கொண்ட உண்மையாகும். இந்தக் கல்வி முறையில் மோகங் கொண்டுவிட்டதின் பயனாக நாட்டின் பொருளாதாரச் செழுமைக்கு மூலகாரணமாயுள்ள விவசாயினுடைய மகன் விவசாயத்தைக் கவனிப்பதில்லை. வியாபாரியின் மகன் வியாபாரத்தைக் கவனிப்பதில்லை. தொழிலாளியின் மகன் தொழிலைக் கவனிப்பதில்லை. எல்லாருக்கும் உத்தியோகப் பித்துத் தலைக்கேறியது ஒன்றே கண்ட பலன். முப்பத்து முக்கோடி மக்களுக்கும் சர்க்கார் உத்தியோகம் சாப்பாடு போட்டுக் காப்பாற்றுமா என்று கேட்கின்றோம்.

இத்தகைய நிலைமை நமது நாட்டைத் தவிர உலகத்திலேயே வேறு எந்த நாட்டிலும் காண முடியாது. நமது நாட்டில் உத்தியோகத்துக்கு என்றே கல்வி பயிலத் தொடங்குகின்றனர். ஐரோப்பா முதலிய மேனாடுகளிலும், ஜப்பான் முதலிய கீழ்நாடுகளிலும் வாழும் மக்கள் கல்வி அறிவுகளை வேறு துறைகளில் பயன்படுத்துகின்றனர். அவர்கள் எல்லோரும் உத்தியோகங்களையே முதன்மையாகக் கருதுவதில்லை. எவ்வளவு படித்தவர்களாயிருந்த போதிலும் உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்து வழிபட்டு வருகின்றனர். ஆயிரக்கணக்கான மைல்கள் கடல் கடந்து போய் வியாபாரம் செய்கின்றனர். நம் நாட்டில் படித்தவர்களின் கதி என்ன ? "அகழியில் விழுந்த முதலைக்கு அதுவே வைகுண்டம்"

---

"உள்ளூருக்கு ஒரு யானை—அயலூருக்கு ஒரு பூனை"

என்றபடி உத்தியோகங்களுக்காக மண்டைகளை உடைத்துக் கொள்ளுவதைத் தவிர வேறொன்றும் பயன் இல்லை.

மாணவ நண்பர்களே! இத்தகைய நமது பிற்போக்கான நிலைமைக்குக் காரணம் என்ன என்பதைச் சற்றே யோசனை செய்து பாருங்கள். நமது நாடு சுதந்தரம் இழந்து அந்நிய ஆதிக்கத்தில் அடிமைப்பட்டுக் கிடக்கின்றது. அதற்கு அநுகூலமாகப் பொருளற்ற ஒழுக்க வழக்கங்களாகிய நமது சமூக சூழல்களும் துணை செய்து வருகின்றன. தலைவர்கள் அரசியல் விடுதலைக்காகத் தீவிரமாக உழைத்து வருவது போலவே மாணவர்கள் சமூக விடுதலைக்காக உழைக்க விரைந்து முற்படவேண்டும். அதற்காக விடுமுறைக் காலங்களை வீணிற் கழித்துவிடாமல் நல்விதமான புண்ணிய கைங்கரியத்தில் செலவிடவேண்டும் என்று வற்புறுத்துகின்றோம்.

பொதுவாக நமது நாடும் சிறப்பாகக் கிராமங்களும் அறியாமை, வறுமை என்னும் பேரிருளில் மூழ்கிக் கிடக்கின்றன. இங்கே மூடப்பூச்சிகளாக வாழும் பாமர மக்கட்கு முற்போக்கு உணர்ச்சியை ஊட்டவேண்டியதே மாணவர்கள் மேற்கொள்ள வேண்டிய அறத் தொண்டாகும்.

கலாசாலைகளிலும், கல்லூரிகளிலும் கல்வி கற்கும் மாணவர்கள் இக்காலத்தில் உடல் நலம் பேணுவதில் சிரத்தைகாட்டி வருகின்றனர். உடல் நலம் பேணுவது போலவே அறிவையும் வளர்ச்சி செய்து வருகின்றனர். இவை மிகவும் மகிழ்ச்சிக்குரிய விஷயங்களே.

ஆனால், மக்கள் வாழ்க்கையின் நோக்கம் வெறும் உடல் நலம் பேணுவதும், அறிவு வளர்ச்சி செய்வதும் மாத்திரம் அல்ல. இவைகளை இன்பம் தரத்தக்க நெறிகளில் பயன்படுத்த வேண்டும்.

உடலையும் அறிவையும் பிறருக்குத் தொண்டு செய்வதில் உபயோகிப்பதே சிறந்த இன்பமாகும். தன்னலம் பேணுவது மட்டும் ஒருவனுக்குரிய இன்பம் என்று கூறுவது தவறு. அது சீக்கிரத்தில் அதிருப்தியைக் கொடுத்து விடும். விரைவில் துன்பமாகவும் மாறிவிடும். தன்னலங் கருதாமல் பிறர் நலங்கருதி உழைப்பதினால் வரும் இன்பமோ என்றும் நீடித்த இன்பமாய் விளங்கும்.

ஆகையால் மாணவர்கள் தங்களுக்குக் கிடைக்கும் விடுமுறைக் காலங்களில் பொதுநலத் தொண்டில் இறங்கி ஊழியம் புரியுமாறு வேண்டிக் கொள்ளுகின்றோம்.

இன்னொரு வகையிலும் மாணவர்கள் கிராமாந்தர மக்கட்குத் தொண்டாற்றக் கடமைப்பட்டிருக்கிறார்கள் என்பதை எடுத்துக் காட்ட விரும்புகின்றோம். நண்பர்களே! நீங்கள் உடல் நலம் பேணி, அறிவு வளர்ச்சிபெற்று நாகரிகமாக நகரங்களில் வாழ்ந்து வருவதற்

"உண்மை நண்பருக்கு உயிர் ஒன்று உடல் இரண்டு"

குப் பொறுப்பாளிகள் யார் என்பதைச் சற்றே சிந்தித்துப் பாருங்கள். உங்கள் பெற்றோர்கள் கொடுக்கும் பணத்தினால் மட்டும் நீங்கள் உயர்தரக் கல்வி கற்று உயர்வாக வாழமுடியாது. அந்தப் பணம் மிகவும் அற்பமேயாகும். கலாசாலைகளும் கல்லூரிகளும் உங்கள் பெற்றோருடைய பணத்தைக்கொண்டு நிறுவப்பட்டவை அன்று. அவை கிராமவாசிகளின் வரிப்பணத்தைக்கொண்டு நிறுவப்பட்டவை. ஆகையால் நீங்கள் நன்றி பாராட்டற் பொருட்டேனும் கிராமாந்தர மக்கட்குத் தொண்டுபுரிய வேண்டும். "எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்பது வள்ளுவர் வாய்மொழி.

வயது முதிர்ந்த பிற்போக்குக் கொள்கையுடையவர்களைப் பற்றியோ, பட்டம், பதவி, கட்சித் தலைமைகளுக்காகப் பாமரமக்களை ஏய்க்குந் தலைவர்களைப்பற்றியோ மாணவர்கள் ஒன்றும் கவனிக்க வேண்டியதில்லை. அத்தகைய சுயநலக்குணங்கள் இயற்கையாகவே மாணவரிடம் கிடையாது. ஆகையால் பாமர மக்கட்கும், தாழ்த்தப்பட்ட மக்கட்கும் ஒரு புதிய விழிப்பை உண்டாக்க வேண்டியது மாணவர் வேலையாகும். உலகத்தில் முன்னேற்றம் அடைந்துள்ள நாடுகளில் என்னென்ன விசேஷங்கள் நடைபெறுகின்றன என்பதைப் பற்றியும், அவ்வந்நாடுகளின் பொருளாதார நிலைமையைப் பற்றியும், வியாபாரம், கைத்தொழில், விவசாயங்கள் எல்லாம் எவ்வாறு நவீன முறையில் நடைபெற்று வருகின்றன என்பதைப்பற்றியும் கிராமாந்தர ஜனங்களுக்கு விளங்கும்படி எடுத்துரைக்கவேண்டும்.

கிராம ஜனங்களுக்கு ஆண்டுதோறும் அரசாங்கத்தார் கிஸ்திப் பணம் வசூலிப்பது ஒன்றுதான் தெரியும். பிறகு அந்தப் பணம் எவ்வாறு செலவிடப்படுகிறது? தாங்கள் வரியாகக் கஷ்டப்பட்டுக் கொடுத்த பணத்திற்குக் கண்ட பலன் என்ன என்ற விபரமே அவர்கட்குத் தெரியாது. அப்படிக் கொடுக்கவேண்டியது தெய்வ கட்டளை—மாறுபட தருமங்களில் ஒன்று என்று நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். இவ்வுண்மைகளை எல்லாம் மாணவர்கள் அவர்களுக்கு நன்கு எடுத்துக்காட்ட வேண்டும். கிராமங்களில் சுகாதார நிலைமை மிகவும் மோசம். இயற்கையில் சுகாதார வசதிகட்கு இருப்பிடங்களான கிராமங்கள் அங்குள்ளவர்களின் சுகாதார ஞானக்குறைவால் மிகவும் கேவல நிலைமையில் வைக்கப்பட்டிருக்கின்றன. கிராமங்களைச் சுத்தமாக வைத்துக்கொள்ளுவதற்கு வேண்டிய ஞானத்தை மாணவர்கள் ஊட்ட வேண்டும்.

பெரும்பாலும் கிராமாந்தர மக்கட்குக் கல்வியறிவு இல்லை. இதனால் கட்சிச்சண்டைகளும், அடிதடிகளும், கொலைகளும், கோர்ட்டு

"துன்பம் உன்னைக் கேட்டுக்கொண்டு வருவதில்லை"

வழக்குகளும் ஏராளமாக நடைபெற்றுக்கொண் டிருக்கின்றன. இவற்றின் தீமைகளையும் கஷ்ட நஷ்டங்களையும் எடுத்துக்காட்டி, இவற்றிற்குப் பரிகாரம் கல்வி யறிவே என்பதை மக்கள் உணரும் படி செய்யவேண்டும். பகலில் வேலைசெய்துகொண்டு படிக்கச் சௌகரியம் இல்லா திருப்பவர்களுக்கு ஆங்காங்கு இராவுப் பள்ளிக் கூடங்களை ஏற்படுத்துமாறு செய்யவேண்டும். கிராமங்களில் "தீண்டாதார்" என்போர் பலவிதமான கொடுமைகளையும் தொல்லைகளையும் அநுபவித்து வருகின்றனர். இவர்க[illegible]ருக்கும் தா[illegible]யான வாழ்க்கையைப்பற்றியும், அவர்களும் மற்ற வகுப்பின[illegible] போல் நல்ல நிலைமைக்கு வந்து விடலாம் என்ற உண்மைக[illegible] பற்றியும், கல்வியின் சிறப்பைப்பற்றியும் நன்கு உபதேசிக்க வேண்டும். தாழ்த்தப் பட்டவர்களின் மக்கட்குக் கல்விச்சாலைகளை ஏற்படுத்தும்படி செய்யவேண்டும்.

கிராமாந்தரங்களில் எளிய வாழ்வின் மேன்மை இப்போது எங்கும் காணப்படுதல் இல்லை. எங்கு நோக்கினும் ஆடம்பரத்தின் சின்னங்களே தென்படுகின்றன. விசேஷ காலங்களில் வரவுக்கு மீறிய செலவு செய்து வருகின்றனர். கடன் படுவதில் ஒரு சிறிதும் பின்வாங்குகின்றார்கள் இல்லை. ஒவ்வொரு கிராமத்திலும் கடன் படாத குடும்பங்களைக் காண்பது மிகவும் அருமை. இதோடு கோர்ட்டு வழக்குகளிலும் ஏராளமான பணத்தைக் கொட்டித் தொலைக்கின்றனர். ஆதலால், மாணவர்கள் சிக்கன வாழ்வின் விசேஷத்தையும், கூட்டுறவுச் சங்கங்களின் சௌகரியத்தையும், பஞ்சாயத்துக் கோர்ட்டுகளின் மேன்மையையும் மக்கட்குப் போதித்துக் காரியத்தில் நடைபெறச் செய்யவேண்டும். கிராமங்களில் உள்ள ஆரம்பப்பாடசாலைகள் ஒழுங்கான முறைகளில் நடைபெறுவதற்குக் கிராமப்பெரியோர்கள் கண்ணோட்டம் செலுத்தி வரவேண்டிய அவசியத்தை எடுத்துரைக்க வேண்டும். அறிவு வளர்ச்சிக்கு இலவச வாசகசாலைகள் சாலச் சிறந்தவை. நாகரிகம் பெற்ற தேசங்களில் வாசக சாலைகள் மிக மேன்மையாகப் பாது காக்கப்பட்டுப் பாராட்டப்படுகின்றன. ஒவ்வொரு கிராமத்திலும் வாசகசாலைகளை நிறுவத் தீவிர முயற்சி செய்தல் வேண்டும். கிராம சங்கங்களை ஏற்படுத்த வேண்டும்.

தீவிர அரசியல் விவகாரங்களில் தலையிட முடியாத மாணவர்கள் கிராம முன்னேற்றத்திற்காகப் பாடுபட முன்வர வேண்டும். இதுவே சிறந்த புண்ணிய கைங்கரியம்—தேச சேவை. ஆதலால் நண்பர்களே இன்றே எழுமின்! விழிமின்! கருதிய கருமம் கை கூடும் வரை உழைமின்! திருவருள் நம்முடைய கோரிக்கைகளை நிறைவேற்றி வைப்பதாக.

ஓம் தத் ஸத்.

# நேயர்களுக்கு ஒரு வேண்டுகோள்.



## 16-வது ஆண்டின் முன்னறிக்கை.

உய்வுண்டாகுக!
வள்ளுவ

நாளிது பிரமோதூத ௵ ஆடி ௴ ௧௬ (16-7-30) நமது "ஆனந்த போதினி"க்கு 16-வது ஆண்டு பிறக்கப் போகிறது. 16-வது ஆண்டில் "ஆனந்த போதினி" பற்பல சிறப்பியல்புகளுடன் பருவத்துக் கேற்ப வளர்ச்சி பெற்று 80-பக்கங்களோடு வெளிவந்து உங்களை இன்புறச் செய்யும் என்ற நற்செய்தியை இப்பொழுதே தெரிவிக்கின்றோம். ஆகையால் "ஆனந்த போதினி"யின் பால் அன்பு பூண்டு ஆதரித்து வரும் அன்பர்கள் எல்லாரும் 16-வது ஆண்டின் சந்தாத் தொகையை நாளிது பிரமோதூத ௵ வைகாசி மாதம் முடிவு (13-6-30) க்குள் மணியார்டர் மூலமாகவோ, நேரிலோ எங்களுக்குக் கிடைக்கும்படி செய்யவேண்டும். பத்திரிகையை நிறுத்திக்கொள்ள விரும்புவோரும் ஷை 13-6-30 தேதிக்குள் எங்களுக்குக் கடித மூலமாகவோ நேரிலோ தெரிவித்துவிட வேண்டும். ஷை சந்தாத் தொகையை முன் பணமாகச் செலுத்திவிடும் நேயர்களுக்கு வழக்கப்படி ஆனிமாத சஞ்சிகையும் அதற்குப் பின் வரும் சஞ்சிகைகளும் சாதாரணத் தபாலில் அனுப்பப்பட்டு வரும். பத்திரிகையை நிறுத்திவிடும்படி தெரிவித்தவர்களுக்கு ஆனி ௴ சஞ்சிகை மாத்திரம் சாதாரணத் தபாலில் வந்துவிடும். நாம் மேற்குறிப்பிட்டுள்ளபடி சந்தாத் தொகையை முன் பணமாக அனுப்பாதவர்களுக்கும், தங்களுக்குப் பத்திரிகை தேவையில்லை என்ற விபரத்தைத் தெரிவிக்காதவர்களுக்கும் அடுத்த 16-வது ஆண்டின் சந்தாத் தொகைக்காக பிரமோதூத ௵ ஆனி மாத சஞ்சிகை வி. பி. யில் அனுப்பப்படும். எங்கள் வேண்டுகோட்படி 16-வது ஆண்டின் சந்தாத் தொகையை முன்பணமாக அனுப்பாமலும், பத்திரிகை தேவைஇல்லை என்று தெரிவிக்காமலும் சும்மா இருந்துவிடும் நேயர்களுக்கு "மௌனம் சம்மதம்" என்ற நியாயத்தை அநுசரித்து அவர்கள் வி. பி. யில் பெற்றுக் கொள்ள விரும்புகிறார்கள் என்று நாங்கள் தீர்மானம்செய்து ஆனி மாத சஞ்சிகையை 16-வது ஆண்டின் சந்தாவுக்காக வழக்கம்போல் வி. பி. யில் அனுப்பி வைப்போம். இந்த நண்பர்கள் வி. பி. யைத் திருப்பிவிடாமல் தயைகூர்ந்து பெற்றுக் கொள்ளுமாறு வேண்டுகின்றோம். இவ்வாறு வி. பி. யைப் பெற்றுக் கொள்ளுகிறவர்களுக்கும் பத்திரிகைகள் வழக்கம்போல் அனுப்பிவைக்கப்படும். வி. பி. யில் அனுப்புவதால் 3-அணா அதிகச் செலவும் பத்திரிகை வந்துசேர வீண் காலதாமதமும் ஆகும். ஆதலால் அன்பர்கள் எல்லாரும் முன்பணம் அனுப்பி ஆதரிப்பதே நலம்.

பினங்கு சிங்கப்பூர் முதலிய மலேயா நாடுகளுக்கும் இதர வெளிநாடுகளுக்கும் வி. பி. இல்லையாகையால் அவ்விடங்களிலுள்ள சந்தா நேயர்கள் எல்லாரும் சந்தாத் தொகையை மணியார்டர் மூலம் முன் பணமாகவே அனுப்பிவிட வேண்டும்.

அன்பு நிறைந்த நண்பர்களே! யாம் மேலே எடுத்துக் காட்டிக் குறிப்பிட்டிருக்கும் விபரங்கள் எல்லாம் உங்களுக்கும் எமக்கும் அநுகூலமானவைகளாகும். வீண் குதர்க்க விவாதம் செய்து எமக்கு அநாவசியமான சிரமத்தை உண்டாக்காமல் நேயர்கள் எல்லாரையும் இவற்றின்படி நடந்து கொள்ளுமாறு வேண்டிக் கொள்ளுகின்றோம். விபரத்தை [illegible] முதல வெறும் தர்க்கஞ் செய்து கடிதங்கள் எழுதி எமக்கு வேதனையை உண்[illegible]க்குவோரின் மனப்போக்கைப்பற்றி யாம் ஆண்டுதோறும் குறிப்பிட்டு வந்திருக்கின்றோம். அவற்றை உணர்ந்திருக்கிற புத்திமான்களுக்கு அவர்களுடைய செய்கை நன்மை பயக்காது என்பதும், யாம் செய்திருக்கும் ஏற்பாடே இருபாலாருக்கும் நலந்தரத்தக்க தென்பதும் நன்கு விளங்கும். ஆகையால் பேரன்புடைய நண்பர்கள் விஷயங்களை நன்கு ஆராய்ந்து வீண் தர்க்கம் செய்யாமல் எம்முடைய ஏற்பாட்டின்படி நடந்து கொள்ளுவார்கள் என்று பெரிதும் எதிர்பார்க்கின்றோம்.

## முக்கிய குறிப்பு

முன் பணம் அனுப்புவோர் பழைய சந்தாதாரர்களாயிருந்தால் மணியார்டர் கூபனில் தங்கள் சந்தா நம்பரைக் குறிப்பிட்டு "16-வது ஆண்டுக்கு" என்று விபரம் எழுதியனுப்ப வேண்டும். புதிய சந்தாதாரர்களாகச் சேருகிறவர்கள் "புதிய ஆண்டுக்கு" என்ற விபரம் எழுதியனுப்பவேண்டும். பழைய சந்தாதாரர் ஒவ்வொருவருக்கும் உரிய சந்தா நம்பர் ஒவ்வொரு மாதத்திலும் வரும் சஞ்சிகையின் மேல் உறையில் வலது பக்கத்தில் எழுதப்பட்டிருக்கும். சந்தா நம்பர் குறிப்பிடுவோர் அதைப் பார்த்துக் கடிதங்கள், மணியார்டர் முதலியவற்றில் எழுதவேண்டும். மேல் உறையில் இடப்பக்கத்தில் 1190 என்ற ரிஜிஸ்டர் நம்பர் அச்சிடப்பட்டிருக்கும். அதை எழுதிவிடக் கூடாது. மேலே விவரித்தபடி கையால் எழுதப்பட்டிருக்கும் மேல் விலாசங்களில் கையால் எழுதப்பட்ட நம்பரையும், அச்செழுத்துக்களில் உள்ள விலாசங்களில் அச்செழுத்து நம்பரையும் குறித்தெழுத வேண்டும். பழைய சந்தாதாரர்களில் சந்தா நம்பர் தெரியாதவர்கள் முன்பணம் அனுப்பாமல் வி. பி. யிலேயே சஞ்சிகை பெற்றுக் கொள்வது நலம்.

பழைய சந்தாதாரர்களில் சஞ்சிகையை நிறுத்தி விடும்படி எழுதுவோரும் மேற் குறித்தபடி தங்கள் சந்தா நம்பரைக் குறித்தெழுத வேண்டும்.

"ஆனந்தபோதினி" 16-வது ஆண்டு ஆரம்ப முதல் 80 அல்லது 96 பக்கங்களோடு வெளிவருவதால் சிங்கப்பூர், பினங்கு முதலிய வெளி நாடுகளுக்கு மாத்திரம் தபால் செலவு அதிகம் ஆகும். ஆதலால் தபால் செலவைச் சேர்த்து ஷை வெளி நாட்டு அன்பர்கள் ரூபா 1—8—0 மணியார்டர் மூலம் அனுப்பிவைக்கவேண்டும்.

பத்திராதிபர்.




# முக்கூடற்பள்.

(ரா. பி. சேதுப் பிள்ளை, பி. ஏ., பி. எல்.)

பள் என்பது தமிழ் நாட்டுக் கூத்து வகையில் ஒன்றாகும். பள்ளிற் சிறந்தது "முக் கூடற் பள்" என்று நயமறிந்த புலவர் போற்றிப் புகழ்வர். பொதிய மலையில் பிறக்கும் பொருனையாறும், திருக்குற்றால மலையில் பிறக்கும் சித்ரா நதியும், சங்கரன் பறம்பிற் பிறக்கும் சிற்றாறும் ஒன்றாய்க் கலக்கும் இடத்தில் அமைந்த சிற்றூர் "முக்கூடல்" என்று பெயர் பெறும். திருநெல்வேலிச் சீமையில் இவ்வூர் முற்காலத்திற் சீரும் சிறப்பும் வாய்ந்து விளங்கிற்று. பிற்காலத்தில் "ஸ்ரீ. வல்லபப் பேரி" என்று பெயர் பெற்று இக்காலத்தில் "சீவலப்பேரி" என்று சிதைந்து வழங்கும் இச் சிற்றூரின் பெருமை முக்கூடற் பள்ளில் சிறந்து விளங்கக் காணலாம்.

சீவலப் பேரி என்னும் சிற்றூருக் கருகே "மருதூர்" என்னும் மற்றோர் ஊர் உண்டு. முக்கூடற் பதியில் வாழை யடி வாழைபோல் வளர்ந்தோங்கிய பள்ளர் குலத்தில் "வடிவழகக் குடும்பன்" என்னும் பேர் பெற்ற பள்ளன் தலை சிறந்து வாழ்ந்தான். இவ்வழகன் முக்கூடலிற் றோன்றிய ஓர் பள்ளியையும், மருதூரில் பிறந்த மற்றோர் பள்ளியையும் மணம் புரிந்து இரு பள்ளியர்க்கு ஓர் பள்ளனாய் இல்வாழ்க்கை நிகழ்த்தினான். திருமால் திருவடியை ஒரு நாளும் மறவாத அழகக் குடும்பன் முறுக்கு மீசையோடும் குறுக்கில் தடியோடும் நாடகமேடையில் தோன்றுகின்றான். பண்படாத நிலத்தை ஏரால் உழுது சேறாக்கிப் பண்படுத்தும் பணியில் சிறந்த பள்ளன்,

"ஒருபோதும் அழகர் தாளைக் கருதா மனத்தை வம்பன்
உழப்பார்க்குள் நரிசென்று கொழுப்பாச்சுவேன்
சுருதியெண் ணெழுத்துண்மை பெரிய நம்பியைக் கேளாத்
துட்டர் செவி புற்றெனவே கொட்டால் வெட்டுவேன்
பெருமான் பதி நூற்றெட்டும் மருவிவலம் செய்யார் தம்
பேய்க்காலை வடம் பூட்டி ரோக்கால் செய்வேன்
திருவாய் மொழி கல்லாரை இருகால் மாடுகளாக்கித்
தித்தி என்றுழக்கோலால் குத்துவேன் ஆண்டே"

என்று வீர மொழி பேசிக் கொண்டு வருகின்றான். அழகர் தாளைக் கருதாத பாழும் மனத்தைப் பள்ளன் கொழுவால் உழுது பண்படுத்துவான். என்

ணெழுத்தைக் கேளாத இரு செவிகளைக் கொட்டால் வெட்டித் திருத்துவான். பெருமாள் உறையும் பதிகளை வலம் வந்து வணங்காத பேய்க் கால்களைத் தறித்து நோக்கால் செய்வான். திருவாய் மொழி கல்லாத கசடரை இருகால் மாடுகளாக்கித் தாற்றுக் கோலால் குத்துவான்.

இவ்வாறு அழகர் பணியில் தலை சிறந்த அழகக் குடும்பனுக்கு வாய்த்த இரு பள்ளியரில் முக்கூடல் மூத்த பள்ளி திருமால் அடியாளாய்த் திகழ்ந்தாள், மருதூர் இளைய பள்ளி சிவநேசப் பள்ளியாய்ச் சிறந்தாள். இவ்விரு பள்ளியரும் முறையே நாடக மேடையில் தோன்றி தம் குலப் பெருமை கூறும் முறை யறிந்து இன்புறத் தக்கதாகும். முக்கூடல் மூத்த பள்ளி முதலில் வருகின்றாள்—தனது பழம் பெருமையைப் பாராட்டுகின்றாள்.

"உத்தரபாகமான சித்திர நதி தென்பால்
ஓடும் பொருநையுடன் கூடும்போதே
அத்தனை காலமும் தொட்டு இத்தனைகாலமும் கண்டு
அடியடி வாழையான குடியில் வந்தேன்.
பத்திலே பதினொன்றாய் வைத்தானிலைக் குடும்பன்
பண்டேசாடு கட்டிக் கொண்டான் என்னை
முத்தமிழ் நாட்டழகர் கொத்தடியானுக் கான
முக்கூடல் மூத்த பள்ளி நானே ஆண்டே"

என்று பிறந்த குலப் பெருமையையும் புகுந்த குலப் பெருமையையும் மூத்த பள்ளி போற்றிப் புகழ்கின்றாள். அப்பால் மருதூர் இளைய பள்ளி மேடையிலே தோன்றுகின்றாள்.

"செஞ்சிக்கும் கூடலுக்கும் தஞ்சைக்கும் ஆணை செல்லும்
செங்கோல் வடமலேந்திரன் எங்கள் ஊரே
நெஞ்சில் குறித்துக் குளமஞ்சக்குஞ் சக்கரக்கால்
நிலையிட்ட நாளில் பண்ணை தலையிட்ட நான்
கஞ்சிக்கும் தன்னிலேதான் கெஞ்சிப் பூந்த வள்ளல்
கண்டாசைப்பட்டே கொள்ளும் பெண்டாட்டிநான்
மஞ்சிற் கருப்பழகர் தஞ்சைப் பள்ளனுக் கேற்ற
மருதூர் இளைய பள்ளி நானே ஆண்டே"

என்று தன் குலப் பெருமையை நிறைந்த சொற்களால் நிகழ்த்துகின்றாள்.

இவ்வாறு குலப்பெருமை கூறி மகிழ்ந்த பள்ளியர் இருவரும் நாட்டு வளம் பாடும் முறை கேட்டு மகிழத் தக்கதாகும். மஞ்சுதோய உயர்ந்த கோபுரமும், வெளியை மறைத்து நின்ற வியன் கொடிகளும், விண்ணளாவி நின்ற தண்ணருஞ் சோலைகளும், அன்னம் விளையாடும் அழகிய பொழில்களும், மதுவைச் சொரியும் மலர்ப்பூஞ் சோலைகளும், அமைந்திருந்த செம்மை சான்ற ஊரின் பெருமையைக்

"கொண்டல் கோபுர மண்டையிற் கூடும்
கொடிகள் வானம் படிகா மூடும்
கண்டபே ரண்டம் தண்டலை நாடும்
கனக முன்றில் அனம்விளை யாடும்

---

"நன்றே என்றும் நாடுக"

விண்ட பூமது வண்டலிட் டோடும்
வெயில் வெய்யோன் பொன் எயில் வழிதேடும்
அண்டர் நாயகர் செண்டலங்காரர்
அழகர் முக்கூடல் ஊர் எங்கள் ஊரே"

என்று பள்ளியர் பாராட்டும் முறை பண்பு வாய்ந்ததாகும். இன்னும் அவ்வூரில் குளிர் நிலா விரிக்கும் மதியிலமைந்த கறையல்லால் மற்றோர் கறையில்லை. வேழத்தின் வெறியல்லால் வேறோர் வெறியில்லை. பறவையை அடைக்கும் பஞ்சரமல்லால் பிறிதோர் சிறை இல்லை. விளக்கில் அமைந்த திரியல்லால் மனத்தில் திரிவில்லை, தேய்வது அம்மியே யல்லால் வேறொன்றில்லை, கொம்புகள் தழைத்துக் குழைபடுவதல்லால் மற்றொன்றும் குழைவதில்லை, நிறைமொழி மாந்தர் அருளிய மறையே யல்லால் மற்றொன்றும் மறைவதில்லை என்று பள்ளியர் நாட்டின் பெருமையை நன்மொழிகளால் இசைக்கின்றார்.

"கறைபட்டுள்ளது வெண்கலைத்திங்கள்
கடம்பட்டுள்ளது கம்பத்து வேழம்
சிறைபட்டுள்ளது விண்ணெழும்புள்ளு
திரிபட்டுள்ளது நெய்படும்தீபம்
குறைபட்டுள்ளது கம்மியர்அம்மி
குழைபட்டுள்ளது வில்வியம்கொம்பு
மறைபட்டுள்ளது அரும்பதச்செய்யுள்
வளமையாரூர் வடகரை நாடே"

என்று பள்ளியர் கூறும் வளமார்ந்த மொழிகளில் அந்நாட்டு வளம் நன்கு விளங்கக் காணலாம்.

இன்னும் சீரும் சிறப்பும் உற்ற சீவலப்பேரியில் காய்வது சூரியகாந்தி மலரேயாம், கலங்குவது கட்டித் தயிரேயாம், மாய்வது காலமேயாம், மறுகுவது வெள்ளமேயாம், சாய்வது நெல்லேயாம், தனிப்பது முனிவர் மனமேயாம், தேய்வது சந்தனக் குறடேயாம் என்று பள்ளியர் பாலித்துரைக்கும் முறை அறிந்து இன்புறத்தக்கதாகும்.

"காயக்கண்டது சூரிய காந்தி
கலங்கக் கண்டது வெண்டயிர்க் கண்டம்
மாயக்கண்டது நாழிகை வாரம்
மறுகக்கண்டது வான்சுழி வெள்ளம்
சாயக்கண்டது காய்க்குலைச் செந்நெல்
தனிப்பக்கண்டது தாபதர் உள்ளம்
தேயக்கண்டது உரைத்திடும் சந்தம்
சீவலம்மங்கைத் தென்கரை நாடே"

என்று பள்ளியர் பாடும் பாட்டு சொல் நயம் பொருள் நயம் வாய்ந்து விளங்கக் காணலாம்.

இன்னும் நீர்வளமும் நில வளமும் மிகுந்த செழுமை வாய்ந்திருந்த சீவலப் பேரியின் செம்மையை,

---

"குறையக் கூறு நிறையக் கொடு"

"சோதிமாமணி வீதிநெருக்கும்
சுரும்புபாடி இரும்பும் உருக்கும்
சாதி நால்வளம் நீதி பெருக்கும்
தடத்து வாளை குடத்தை நெருக்கும்
போதில் மேய்ந்து இளமேதி செருக்கும்
புலமெலாம் தண் மலர்வண் டிருக்கும்
ஆதிநாதர் அழகி யொருத்தர்
அழகர் முக்கூடல் ஊரெங்கள் ஊரே"

என்று பள்ளியர் புகழும் அழகிய மொழியின் கற்போர் உள்ளத்தைக் கவர்வன வாம். எங்கும் இன்னொளியும் இன்னொலியும் நிரம்பி நின்ற அவ்வூரில் சுரும்பு கள் பாடி இரும்பையும் உருக்குமென்றும், கயத்து வாளை மீன் குடத்தை நெருக்கும் என்றும், இளம்புல் மேய்ந்து எருமை செருக்கு மென்றும், மலர் களில் மதுவை மாந்தி வண்டுகள் இன்னொலி பெருக்கு மென்றும், பள்ளியர் அந்நாட்டின் பெருமையைப் பண்ணார்ந்த சொற்களால் பாராட்டிப் போற்று கின்றார்.

இவ்வாறு நல்லறமும் நல்வளமும் நனி சிறந்தோங்கிய அந்நாட்டில் தென்னையும், கமுகும், மாவும், பலாவும், மாதுளையும், வாழையும் மாண்புற வளர்ந்து தீங்கனி நல்கிய திறத்தினை பள்ளியர் வாயாரப் புகழ்ந்து போற்றும் முறை வளமார்ந்த தாகும். ஓங்கி உயர்ந்த தெங்கின் கனிகள் கமுகில் தாங்க வும், கமுகின் காய்கள் மாவில் தாங்கவும், மாவின் கனிகள் பலாவில் தாங்க வும், பலாவின் கனிகள் வாழையிற் சாயவும், வாழைக்குலைகள் மாதுளையிற் பாயவும் நின்ற வளமார்ந்த சோலையை,

"மீதுயர்ந்திடு தெங்கிளநீரை மிடைந்தபூகம் சுமந்து தன்காயைச்
சூதமொன்று சுமக்கக் கொடுக்கும் சூதம்தன்கனி தாங்கும் பலாவில்
ஓதும்அந்தப் பலாக்கனி வாழை வுளுக்கவேசுமந் தோண்குலை சாய்க்கும்
மாதுளக்கொம்பு வாழையைத்தாங்கும் வளமையாசூர் வடகரை நாடே"

என்று பள்ளியர் புகழும் முறை புதியதோர் இன்பம் அளிப்பதாகும்.

## சந்தா நேயர்களுக்கு

நமது "ஆனந்தபோதினி" மாத சஞ்சிகை ஒவ் வொரு தமிழ் மாத முதல் தேதியிலும் எக்காரணத்தை முன்னிட்டும் நிறுத்தப்படாமல் தபாலில் சேர்க்கப் பட்டு வந்தும் சிலர் சஞ்சிகை கிடைக்கவில்லை என்று எமக்கு அடிக்கடி தெரிவிக்கின்றனர். இந்த நண்பர் கள் அந்த அந்த ஊர் போஸ்டு மாஸ்டருக்கு விஷயந் தெரிவித்தால் சஞ்சிகைகள் ஒழுங்காகக் கிடைத்து வரும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

ப-ர்.




(சிவானந்தசாகர யோகீஸ்வரர்)

## இல்லற வொழுக்கம்

### "இல்லற மல்லது நல்லற மன்று"

இதனை, இல்லறம் (நன்று) அல்லது நல்லறமன்று என்று இரண்டு வாக்கியங்களாக்கிக் கொள்க.

(இதன்பொருள்) இல் அறம் (நன்று)—இல்லற மென்கிற நெறியே நல்லதாம்; அல்லது நல் அறம் அன்று. அது வல்லாத (மற்றொன்றாய) துறவறம் நல்ல அறநெறி அல்லவாம்.

இல்லறம்—இது வடமொழியில் கிருஹஸ்த தர்மம் எனப்படும். இல் கிருகம் என்பன ஒரு பொருளன. இல் என்பதற்கு மனைவி யென்றும் பொருளுண்டு. ஆதலால் வீட்டிலிருந்து மனைவியுடன் வாழ்ந்து செய்யப்படும் தருமமே இல்லறம் எனப்படும். குலத்தானும் கோத்திரத்தானும் தனக்கொத்த குடும்பத்திற் பிறந்து வேதவிதிப்படி அக்கினிசாட்சியாக மணம்புரிந்து கொள்ளப்பட்டவளே மனைவி யெனப்படுவாள். விவாகம் மணம் என்பன ஒரு பொருளன. விவாகம் என்பதற்கு வகித்தல் என்பது பொருள். அதாவது ஆண் சரீரகுணத்தைப் பெண்ணும் பெண் சரீர குணத்தை ஆணும் பெற்றுக்கொள்வதாம். இதனாலேதான் புருஷன் சரீரத்தில் பாதிசரீரம் மனைவியாவாள் என்பது. இதனால் இருவர் சரீரத்தையும் ஒரு சரீரமாக்குவதே விவாகத்தின் பயனும். இந்த விவாகம், தெய்வம், பிராமம், ஆரிஷம், பிராஜாபத்தியம், காந்தர்வம், ஆசுரம், இராக்ஷஸம், பைசாசம் என எண்வகைப்படும். இவற்றுள் முதற் கூறிய நான்கும் சிறப்புடையன. மற்றைய ஒன்றுக்கொன்று தாழ்ந்துள்ளன. அத்துணைச் சிறப்புமின்று. அவற்றுள்ளும் பைசாசம் ஒரு பொழுதும் செய்யத்தகாதது. பிராமம் என்கிற விவாகமே எப்பொழுதும் எல்லோராலும் செய்யப்படுவது. நான்கு வருணத்தாரும் தத்தம் வருணத்திற்குக் கூறிய விதிவழுவாமல் குலகோத்திரத்தாலொத்த குடும்பத்திற் பிறந்து நற்குண நற்செய்கைகளுள்ள பெண்ணை மணந்து இல்லறநெறி நின்று எங்கும் நிறைந்த பரம்பொருளை வழிபட்டு இம்மை, மறுமை, வீடு என்னும் சுகபோக வாழ்வுகளைப் பெறுவதே இல்லறத்தாலாகிய பயனும்.

நற்குலம் அதாவது இருவழியிலும் குற்றமற்றதான குலத்திற் பிறந்த மாதா பிதாக்களுக்குப் பிறத்தல். கோத்திரமாவது தன் கோத்திர

மல்லாத கோத்திரம். இத் தம்பதிகளுக்குப் பிறந்தவனே நற்குண முடையவன். இதனை ஆடவனுக்கும் கொள்க. அயல்வீடு செல்ல விருப்பமில்லாதவளும், வம்புகள் பேசப் பிரியமில்லாதவளும், மாதாபிதாக்களுக்குப் பணிந்து நடப்பவளும், ஆஸ்திகபுத்தி யுள்ளவளும் மிதபோஜன முள்ளவளும், அதிக நித்திரை இல்லாதவளும், அதிகாலையி லெழுந்திருப்பவளும், வீட்டு வேலைகள் செய்வதில் சோம்பலில்லாதவளும், நன்றாய் அடிசிலாக்கும் வல்லபமுடையவளும், எப்பொழுதும் மலர்ந்த முகமுடையவளும், கோபமில்லாதவளும், இனிமையாகப் பேசுகிறவளும், டம்பத்தில் விருப்ப மில்லாதவளும், ஏழைகளிடத்தில் இரக்க முள்ளவளும், வீட்டுப் பொருள்களில் கவலையுள்ளவளும், விருந்தினரைக்கண்டு மகிழ்பவளும், குஷ்டரோகாதி கொடியநோயுள்ள வம்சத்திற் பிறவாதவளும், சுசியுள்ளவளும், அசுசியை அருவருப்பவளும், தெய்வ பக்திபுடையவளும் எல்லாருக்கும் நல்லவளா யிருப்பவளுமான பெண்ணே விவாகம் புரிவதற் குரியவள்.

சகல கலைகளையும் குரு மூலமாகத் தெரிந்துகொண்டு ஸமாவர்த்தன முடித்துள்ளவனே விவாகத்துக் குரியவனும். உபநயனம் ஸமாவர்த்தனம் என்கிற சடங்குகள் துவிஜர்களுக்கே உரியன. பிரமத்தைத் தரிசிப்பித்தலாகிய உபநயனம் துவிஜர்களுக்கே விதிக்கப்பட்டது. உபநயனமான பின் குருகுலவாசம் செய்து வேதாதிகலைகளை யோதிய பின் ஸமாவர்த்தனம் நடத்தப்படும். நாலாம் வருணத்தவர்க்கு விவாகத்திலேயே உபநயன கிரியையும் அடங்கி யிருக்கிறது. பெண்களுக்கு விவாகமே உபநயனமாம்.

இத்தகைய ஆடவரே விவாகத்துக் குரியவராவர். பெண்ணின் பிதாவும், நற்குலத் துதித்துக் கல்வி கேள்விகளிலே தேர்ந்து ஆஸ்திகபுத்தி யுடையவனாய், வியாதியற்ற திடகாத்திர முடையவனாய், அழகு குணங்களிலே சிறந்தவனாய், இவ்வுலகத்திற்குரிய பொருளீட்டும் வல்லமை யுடையவனாய், பழிபாவங்கட்குப் பயப்படு மியல்புடையவனாய் பிறர் துன்பத்திற்கு இரங்குகிறவனாய்த் தெய்வ குரு வழிபாடு செய்பவனாய், காமம் வெகுளிகளில்லாதவனாய் இன்சொற் புகல்பவனாய் எல்லோருக்கும் நல்லவனாய் இருப்பவனைக் கூடிய வரையிற் பரீக்ஷித்தறிந்து அவனுக்குத் தன் பெண்ணைக் கொடுக்க வேண்டும்.

உபநயனம் என்பது ஒத்தாசைக்கண், மனமொழிகளுக் கெட்டாத தெய்வத்தைத் தரிசித்தற்குரிய ஞானக்கண்ணை யுண்டாக்குவதாம். அது பிராணயாமாதி நெறியைக்கூறித் தன் குருவையே பிரமசொரூபமாகத் தியானிக்கக் கூறுவது. மனமொழிகளுக்கு எட்டாததும் தனக்கென ஓர் வடிவமில்லாததுமான தெய்வத்திற்குக் குருவின் வடிவத்தையே வடிவமாகக் காட்டித் தெய்வ வழிபாட்டைப் போதிப்பது. பின்னர் அவன் குருவையே தெய்வமாகக் கருதிக் குருகுலவாசஞ்செய்து வேதாதிகளை ஓத வேண்டும். குருபக்தியிற் சிறந்திருப்பின் அவனே தெய்வ வழிபாட்டிற் சிறந்தவனும்.

தனக்கென ஓர் உருவமில்லாத பரம்பொருள் மனித ரூபங்கொண்டு வந்துதான் தனது நிஜசொரூபத்தை வெளிப்படுத்தும். ஆதலால் குருவையே தெய்வமென்று கொள்ளவேண்டு மென்பது ஆரியர் சித்தாந்தம்.

---

"வெள்ளம் வரும் முன்னே அணைபோட வேண்டும்"

அதனாலேதான் குருபக்தி, லிங்கபக்தி, சங்கமபக்தி—என்று பத்திமார்க்கம் மூன்றாயிற்று.

குருபக்தி கூறினம். லிங்கபக்தி யென்பது பிரமசொரூபமென்று திரு மிக்கப்பட்ட விக்ரகாதிகளில் ஆராதிப்பதாம். சங்கமபக்தியாவது, தேவ னடியார்களை ஆராதிப்பது. ஜடப்பொருளாகிய சிலைலோகங்களைவிடச் சைதன்ய சொரூபமாகிய குரு சங்கமங்களில தேவஸாந்நித்யம் அதிகமா யிருக்கும். சங்கமத்தைவிடக் குருசொரூபமே இலாக்ஷியம். குருவைத் தெய்வமாகக்கொண்டு வழிபடுவது மிகவும் சிறந்தது. அதனால் தேவா நுகரகத்தை உடனே பெறலாகும். இந்தக் குருபக்தி இருவருக்கும் பொது வாகும்.

பெண்களுக்கு விவாகமே உபநயனமென்று கூறினோம்—

"வைவாஹிகோவிஸ்திரீணமிம்—ஸம்ஸ்காரோவைதிக ஸ்மிருத:
பதிஸேவாகுரௌவாஸே க்ருஹார்த்தோக்னி பரிக்கிரியா"

என்ற மநுஸ்மிருதி வசனத்தினால் விவாகமே பெண்களுக்கு உபநயன மெனவும் பதிஸேவையே குருசேவையாகு மெனவும் க்ருஹ கிருத்தியமே அக்னிகாரியமா மென்றும் பெறப்படுவது காண்க.

இதனால் புருஷனையே குருவாகவும், தெய்வமாகவும் கொள்வது விவாக காலத்திற் பெண்களுக்கு உபதேசிக்கப்படுமென்பது கொள்க. ஆதலால் கண வனையே குரு தெய்வமாகக்கொண்டு வழிபடுவதே ஸ்திரீகளுக்குப் பக்தி நெறியாமென்க. இந்நெறிபற்றி வழுவாது நடப்பவளே கற்புடையா ளென்று புகழப்படுவா ளென்க.

இதனையே 'கற்பெனப்படுவது சொற்றிறம் பாமை" என்று அவ்வையார் கூறினர். "கற்பு" கற்றுக் கொள்ளப்படுவது. அதாவது பாலிய காலத்தில் மாதா பிதாக்களாலும், வம்ச குருவாலும், விவாகத்தின் பிறகு கணவனாலும், சொல்லப்படுபவைகளைக் கற்றுக்கொண்டு அவ்வழி நிற்பதாம். இதுவே பெண் களுக்குக் கல்வியுமாம். கணவன் சொல்லைக் கடந்து நடவாமையே கற் பெனப்படுவது என்றதனால் அவன் சொல்வழி தவறாமல் நடப்பதே கற் பென்ற தாயிற்று.

இந்நெறி நிற்பவளைப் பதிவிரதை யென்று நூல்கள் வியந்து கூறின. "பதி" புருஷன், தெய்வம், கணவன். பக்தி, பணிவிடைகளைச் செய்வ தையே விரதமாகக் கொண்டவள் என்பது அதன் பொருள்.

(தொடரும்)

---

## "பீடை மாசம்"

வினா:—"இந்த வருஷத்தில் "பீடைமாசங்களிலும் கூட இத்தனை கலியாணங்கள் நடக்கின்றனவே, ஏன்?"

விடை:—"சாரதா சட்டத்தால் "பீடைமாசம்" எகிறி விட்டது. முகூர்த்தத்தோடு வேலையும் குறைந்தது."

---

"உள்ளத்தின் உருவச் சித்திரம் பேச்சு"

# புத்தாண்டு வாழ்த்து

——(o)——

நன்மை யோடுபுத் தாண்டு வருகவே!
நானிலத் துறை மாந்தரைச் சூழ்ந்தும்
புன்மை நீங்கிட வேண்டு மவர்புகழ்
பெற்றுநன் கிவண் ஓங்கிட வேண்டுமால்!
வன்ம மின்றிஇம் மாந்தர் பிறர்தமை
வாய்த்ததம் முயிர் போலெண வேண்டுமே
இன்மை என்றசொல் எங்கும் இலாமலே
இந்நிலத் துறை எம்மவர் வாழ்கவே.

***

ஆட்சி நம்முடைத் தாகஇவ் வாண்டிலே
ஆர்ந்தபே ரடி மைநெறி நீங்குக!
மாட்சி சேர்தரு வாழ்க்கையை எம்மவார்
மாண்டநல் லறி வோடுமன் கொள்கவே!
நீட்சி கொண்டபெ ரும்புகழ் சேர்தரு
நற்சுதந்திரம் பெற்றவர் வாழ்கவே
நாட்சி லதனில் நம்மறப் போரது
நன்மைசேர் பெரு வெற்றிகொண் டுய்கவே.

***

நல்லறம் இவண் நன்குவ ளாகவே
நாடு மின்பம் அதன்பயத் தாதலால்
புல்லறங் களின் பூண்டுமி லாமலும்
பூரி யோர்கள் மிகுந்தனர் மாயவும்
தொல்லறங் களிங் கென்றும ருமலே
தோற்றி நின்று துணைபுரிந் தெம்மையே
வல்லமை யொடு மாநில மீதிலே
வாழ நன்று அருள்புரி வாயரோ.

***

தேடு கின்ற பெருநிதி யாவுமெம்
தேயத் தார்களுக் கேயுரித் தாகுக!
மாடு கன்று பெருகியிம் மாநில
மாந்தர் ஓங்குக! ஓங்குக! ஓங்கவே!
ஈடு இன்றி எமதரும் பாரதம்
இன்ப முற்றெழி லார்ந்துநன் றோங்கவே!
கூடு கின்ற திரவியத் தோடுமே
கூர்த்த போறி வெய்திநன் றோங்கவே!

# தமிழ்மொழியின் பெருமை

———(o)———

(பேரா. திருகூடசுந்தரம் பிள்ளை, எம். ஏ., பி. எல்.)

ஏழ்கடல் வைப்பினுந் தன்மணம் வீசி
இசைகொண்டு வாழியவே
எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி
என்றென் றும் வாழியவே.

தமிழர்க்குத் தங்கள் தாய்மொழியாகிய தமிழ்மொழியின் பாலுள்ள கழிபேரன்பின் காரணமாகத் தம்மொழியே தரணியிலுள்ள சகல மொழிகளிலுந் தலைசிறந்தது என்று சாற்றி வருகின்றனர் என்றும், தமிழ் பாஷையின் பெருமைக்கு அவர்கள் கூறும் காரணங்கள்-புராணக்காரணங்கள், சரித்திரக் காரணங்கள் என இருவகைப்படும் என்றும், அவற்றுள் புராண சம்பந்தமான காரணங்கள் இவை என்றும், அக்காரணங்களை உண்மையானவை என்று ஒப்புக்கொள்ள முடியாது என்றும், ஒப்புக்கொள்ள இயலாமைக்குரிய காரணங்கள் இவை என்றும், உண்மையானவை என்று ஏற்றுக் கொண்டாலும் அவற்றைக் கொண்டு தமிழ்மொழியின் மாண்பை நிரூபித்தல் முடியாத காரியம் என்றும், அதன் பின்னர் சரித்திரக் காரணங்கள் இவை என்றும், அவற்றுள் முதற்கண் கூறப்படும் தமிழ்மொழி தோன்றிய காலத் தொன்மைக் குரிய சான்றுகள் தமிழ் நூல்களில் காணப்படுவன, வடமொழி நூல்களில் காணப்படுவன, இதர நாட்டாருடைய கிரந்தங்களில் காணப்படுவன என மூவகைப்படும் என்றும், அம்மூவகையில் முதல் இருவகைச் சான்றுகள் இவை என்றும் இதற்கு முன் இது சம்பந்தமாய் எழுதிவந்த வியாசங்களில் விளக்கியிருந்தேன். இனித் தமிழ் பாஷையின் பழமைக்கு ஆதாரமாக இதர தேசத்தினர் இயற்றியுள்ள நூல்களில் காணப்படும் குறிப்புக்களைக் கவனிப்போம்.

## பிறநாட்டு நூல்கள்

தமிழ்மொழியின் தொன்மைக்கு ஆதாரமாய் முன் கூறிய குறிப்புக்கள் அனைத்தும் தமிழ் நூல்களில் இருந்தும் சம்ஸ்கிருத நூல்களில் இருந்தும் எடுத்துக் கூறப்பட்டன. ஆனால் சிலர் அக் குறிப்புக்கள் கூறும் நூல்கள் அநேகமாகப் புராண இதிகாசங்களாக இருக்கின்றன; புராண இதிகாசங்கள் கூறுபவற்றை யாரால் நம்ப இயலும்? கவிகளின் கற்பனைகளையும் புனைந்துரைகளையும் கால நிர்ணயத்திற்கேற்ற சான்றுகளாகக் கொள்வது தகுமோ? தவிர அந்நூல்களின் காலம் அறுதியிட்டு உறுதி கூறமுடியாத தொன்று; அதனால் புராண இதிகாசக் கூற்றுக்களைக் கொண்டு தமிழின் காலத்தைக் கணித்தல்

"துன்பப்பட்டு வாழலாம் மானங்கெட்டு வாழ முடியாது"

மணல்மேட்டில் மாளிகை வகுப்பதாகும் என்று ஆட்சேபிக்கக் கூடும். ஆகையால் யாராலும் மறுக்க முடியாத வேறு சான்றுகள், காலம் நிச்சயித்து அறியக்கூடிய இதர நூல்களிலிருந்து வேறு குறிப்புக்கள் தேவை என்று கூறக்கூடும்.

அங்ஙனம் அவர் விரும்பும் சான்றுகளும் குறிப்புக்களும் இல்லாமல் இல்லை, இருக்கவே செய்கின்றன. இயேசுகிறிஸ்து நாதர் பிறந்து சுமார் இரண்டாயிரம் ஆண்டுகள் ஆகின்றன. ஆனால் அவருடைய காலத்திற்கு வெகு நாட்களுக்கு முன்னரே நமது தமிழ்நிலம் தனி நாகரிகம் பெற்றுத் திகழ்ந்த நாடு என்பதும் அதனால் நமது தமிழ்மொழி அதற்கு வெகு காலத்திற்கு முன்னரேயே தோன்றியிருக்க வேண்டும் என்பதும் உண்மை என்று உரைக்கக்கூடிய சில சான்றுகள் தருகின்றேன்.

### சான்றுகள்.

(1) இத்தாலி தேசம் என்பது ஐரோப்பாவில் உள்ளது. அத்தேசத்தின் ராஜதானி நகரம் இப்பொழுது போலவே முன்னுளிலும் ரோமாபுரியாகும். அந்நகரத்தில் கிறிஸ்து பிறப்பதற்குச் சுமார் இருபத்தைந்து வருஷங்களுக்குமுன் அரசு செய்து வந்தவன் அகஸ்டஸ் ஸீஸர் என்பவன். அக்காலத்தில் செந்தமிழ் நாட்டின் ராஜதானிப் பட்டணமாகிய மதுரையில் செங்கோலோச்சி வந்த செழியன் அவ்வகஸ்டஸ் அரசனுக்கு "ஸ்தானாபதி"களை அனுப்பிச் சிநேக சம்பந்தமான உடன்படிக்கை செய்து கொண்டதாகச் சரித்திராசிரியர்கள் பலர் கூறுகின்றனர்.

ரோமராஜ்யத்திற்கும் தமிழ் நாட்டுக்கும் அக்காலத்தில் நெருங்கிய சம்பந்தமும் வியாபாரப் போக்கு வரத்தும் உண்டென்பதைத் தமிழ் நாட்டில் இப்பொழுதும் பலவிடங்களில் காணப்படும் ரோமநாணயங்கள் சான்று பகர்ந்து நிற்கின்றன.

(2) இயேசு கிறிஸ்து பிறப்பதற்கு 205 வருஷங்களுக்கு முன் சோழ தேசத்தில் அரசாண்டுவந்த "ஏலாலர்" என்னும் சிற்றரசர் ஒருவர் பெரிய சேனையொன்றுடன் கப்பலேறிக் கடல்கடந்து இலங்கை சென்று அத்தீவை ஆண்டுவந்த அரசரோடு அமர்புரிந்து வாகை சூடியதாக மிஸ்டர் ஜே. ஈ. டெனன்ட் என்பவர் "இலங்கை" என்னும் நூலில் கூறுகின்றார்.

(3) கிறிஸ்து பிறப்பதற்குச் சுமார் 350 வருஷங்களுக்கு முன் வடநாட்டில் மகத தேசத்தில் அரசுசெய்து இப்பொழுது உலகமெங்கும் உத்தம மன்னன் என்னும் அழியாப்புகழ் அடைந்துள்ள அசோக மகாராஜர் அக்காலத்தில் அவர் பாலிபாஷையில் தயாரித்துப் பல விடங்களில் நாட்டிவைத்த பல சிலா சாஸனங்களில்

> "சோழர்கள் பாண்டியர்கள் கேரள
> புத்திரர், தாம்பரபர்ணி நதிவரை"

என்னும் பதங்கள் காணப்படுகின்றன. அதனால் அக்காலத்திலேயே தமிழ் நாட்டார் நாகரிகம் அடைந்திருந்ததோடு வெளிநாட்டார்களுக்கும் நன்றாய்த் தெரிந்தவராய் இருந்தனர் என்பது தெள்ளிதில் புலனாகும். தமிழ் பாஷையின் தோற்றம் அதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னராகும் என்று விவரித்து உரைக்க வேண்டுமோ?

---

(4) அசோக மகா ராஜருடைய தந்தையார் காலத்தில் அவருக்கு மதி மந்திரியாய் இருந்து, இக் காலத்து சரித்திர ஆசிரியர்கள், பொருள் நூல் நிபுணர்கள் யாவரும் புகழ்ந்து போற்றும் "அர்த்தசாஸ்திரம்" என்னும் அரும் பெரும் நூலை இயற்றியுள்ள சாணக்கியர் என்பவர் அர்த்த நூலில் பாண்டிய நாட்டைப் பற்றியும் அந்த நாட்டின் தனி நாகரிக சின்னங்களைப் பற்றியும் பலவிடங்களில் பகர்ந்துள்ளார். அவைகளில் சில வருமாறு:—

(அ) தாம்பர பர்ணி நதியில் உண்டாகும் "தாம்பர பர்ணிகா" என்னும் முத்து மிகச் சிறந்ததாகும். (தாம்பர பர்ணிநதி தென்பாண்டி நாடாகிய திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள முக்கிய ஆறு).

(ஆ) பாண்டிய காவதத்தில் காணப்படும் "பாண்டிய காவதகா" என்னும் முத்தம் சிறந்ததே.

(இ) பாண்டிய தேசத்தில் நெய்யப்படும் கறுப்புவர்ணமும் முத்துப் துப்போல் மேன்மையும் பொருந்திய "பௌண்டரகா" என்னும் கம்பளி.

(ஈ) பாண்டிய தேசத்துத் தென் மதுரை நகரில் செய்யப்படும் நேர்த்தியான பருத்தி ஆடைகள்.

(உ) மகத நாட்டார் வடநாட்டோடு வாணிபம் செய்வதைவிட தென்னாட்டோடு வாணிபம் செய்வதே சாலச் சிறந்தது. ஏனெனில் தென்னாட்டிலும் தென்னாட்டில் வஸ்திரங்களுக்குப் பேர்போன மதுரையிலும் இருந்துமே விலையுயர்ந்த வாணிப வஸ்துக்கள் பல கிடைக்கின்றன.

இங்ஙனம் இவர் கூறுவதால் கிறிஸ்து பிறப்பதற்கு நானூறு வருஷங்களுக்கு முன்னதாகவே பாண்டியநாடும் அதைப்போல சோழ சேரநாடு முதலிய தமிழ்நாடுகளும் பழமையான நாகரிகம் பெற்றிருந்தன என்பது விளங்கும்.

(5) அசோகருடைய தந்தை சந்திரகுப்த மன்னன். அவனே கிரீஸ் தேசத்திலிருந்து வந்த சேனைகளை இந்தியாவை விட்டு வெளியே துரத்தியவன். அப்பொழுது கிரேக்க மன்னன் தன் மகளை அவனுக்கு மணஞ் செய்து வைத்தான். தன் மகளை அவனுடைய அரச அவைக்கு அனுப்பிய பொழுது துணையாக கிரேக்க வித்வான் "மகாஸ்தனிஸ்" என்பவனையும் அனுப்பி வைத்தான். அவன் பல வருஷங்கள் சந்திரகுப்தன் சபையில் இருந்தான். அதனால் நாட்டின் நலன்களை நன்கு அறியப் பல சந்தர்ப்பங்கள் பெற்றிருந்தான். அவன் பின் தன் நாடு போனதும் ஒரு நூல் தான் இந்தியாவில் கண்ட விஷயங்களைக் குறித்து எழுதினன். அந்நூல் இப்பொழுது சுமார் இரண்டொரு நூற்றாண்டுகளுக்கு முன்னர் மொழி பெயர்க்கப்பட்டு வெளியாயிற்று. அந்நூலில் பாண்டிய நாட்டைப் பற்றிப் பலபடப் புகழ்ந்துள்ளார் அக் கிரேக்க ஆசிரியர். ஆகையால் அவர் குறிப்புக்கள் சாணக்கியர் கூற்றுக்களை வலியுறுத்துவதைக் கவனிக்க.

(6) அக் காலத்தில் பாண்டிய சோழ நாட்டார் வட நாட்டாரோடு மட்டுமே வியாபாரம் செய்துவந்தனர் என்பதில்லை. ஐரோப்பாவிலுள்ள கிரீஸ், ஸிரியா முதலிய இதர தூர தேசங்களுக்கும் ஸ்தானாபதிகள் அனுப்பி வந்தனர் என்றும் தெரிகின்றது. அதோடு கிரேக்க நாட்டார் பலர் பாண்டிய சோழ நாடுகளில் வந்து வசித்து வந்தனர் என்பதும் உண்மையாகும்.




## வேதாந்த சூடாமணி வசனம்.

(தமிழ்ப் பண்டிதர் பூ. ஸ்ரீநிவாசன்.)

(சத்து சித்து ஆனந்தம் நித்தியம் பூரணம் என்னும் ஆன்ம லட்சணங்களுள் முதலதாகிய சத்து வியாவகாரிக சத்து, பிராதிபாசிக சத்து, பாரமார்த்திக சத்து என மூவகைப்படும் என்று முன்னஞ் சொல்லப்பட்டது. இனி மற்றவைகளின் வகைகள் கூறப்படுகின்றன.) சித்தின் பேதம்:—"சீவனே டீசன் கூடத்தன் பிரமமென்னச் சித்து நான்காம்." சீவன் ஈசன் கூடத்தன் பிரமம் எனச் சித்து நான்கு வகைப்படும். இவற்றிற்குத் திருஷ்டாந்தம் முறையே கடசலப் பிரதிபிம்பாகாசம், மேகசலப் பிரதிபிம்பாகாசம் கடாவச் சின்னாகாசம் (கடாகாசம்), மகாகாசம் என்பனவாம்.

(இவற்றின் விளக்கத்தை எம்மால் எழுதப்பட்ட "ஞானசூரியோதயம் என்னும் வேதாந்த இரகசியார்த்த வினாவிடை"யினின்று எடுத்துக்காட்டுவாம்.

(1) ஜீவன்:—கடத்திலுள்ள ஜலத்தில் ஆகாசத்தின் பிரதிபிம்பமுண்டாகின்றது. அவ்வாகாசத்தின் பிரதிபிம்பமும் கடாகாசமும் ஆகிய இரண்டும் கூடியது ஜலாகாசமாம். அதுபோல சரீரத்திற்குள்ளிருக்கும் அந்தக்கரணம் அல்லது அவித்தையில் பிரதிபிம்ப சேதனமும் அதன் அதிஷ்டான சேதனமுமாகிய இரண்டும் கூடியது ஜீவனும்.

(2) ஈசுவரன்:—ஆகாசத்திற் காணப்படும் மேகமானது எவ்வளவு ஆகாசத்தைத் தனக்கிடமாகக்கொண் டிருக்கின்றதோ அந்த ஆகாசமும் மேகசலப் பிரதிபிம்பாகாசமும் சேர்ந்தது மேகாகாசமாம். அதுபோல, ஆகாசத்தில் மேகம்போல பிரஹ்மத்தி னிடத்திலுள்ள மாயையிற் பிரதிபிம்பிக்கிற சேதனத்தின் ஆபாசமும் அம்மாயையின் அதிஷ்டான சேதனமுமாகிய இரண்டும் கூடியது ஈசுவரனும்.

(3) கூடஸ்தன்:—இங்கே ஒரு ஜலம் நிறைந்த கடம் இருக்கின்றதென வைத்துக்கொள்ளுவோம். அக்கடத்திற்கு எவ்வளவு ஆகாசம் இடங்கொடுக்கின்றதோ அவ்வளவு ஆகாசமும் கடாகாசமாம். அதுபோல, அந்தக்கரணம் அல்லது அவித்தையின் அதிஷ்டான சேதனம் கூடஸ்தனும்.

(4) பிரஹ்மம்:—பிரஹ்மாண்டத்தின் உள்ளும் புறமும் ஒரே தன்மையாயும் வியாபகமாயு மிருப்பது மகாகாசமாம். அதுபோல, எங்கும் வியாபகமாயும் நிர்விகாரமாயு மிருப்பது பிரஹ்மமாம்.

---

"அஞ்சாமை அன்ன அணிகலன் இல்லை"

ஒரே ஆகாசமானது தான் ஒன்றாகவே யிருப்பினும் உபாதியால் மகாகாசமென்றும் மேகாகாசமென்றும் கடாகாசமென்றும் ஜலாகாசமென்றும் கற்பனையாக எண்ணப்படுவதுபோல, இரண்டாவதற்றதாகிய ஏகசைதன்யமே உபாதியால் பிரஹ்மமெனவும் கூடஸ்தனெனவும் ஈசுவரனெனவும் ஜீவனெனவும் கற்பிதமாக எண்ணப்படுகின்றது என்பது கண்டறியத் தக்கதாம்.

விண்ணொன்றே மகாவிண் ணென்றும் மேகவிண் ணென்றும் பாரின்
மண்ணென்ற கடவிண் ணென்றும் மருவியசலவிண் ணென்றும்
எண்ணுங்கற் பனைபோ லொன்றே யெங்குமாம் பிரம மீசன்
நண்ணுங்கூடஸ்தன் சீவன் நான்குமை தன்யமாமே.

என்னும் கைவல்லியநவநீதச் செய்யுளையுங் காண்க.)

ஆனந்தபேதம்:

"விடயமொடு பிரம்மவாசனை முக்கி யம்பின்
னவுநிசவான்மாவோ டத்துவிதம் வித்தை
யெனுமிவற்றின் பெயரா லெண்வகைப்படு மானந்தம்."

ஆனந்தமானது விஷயானந்தம், பிரஹ்மானந்தம், வாசனானந்தம், முக்கியானந்தம், நிஜானந்தம், ஆத்மானந்தம், அத்துவிதானந்தம், வித்தியானந்தம் என எண்வகைப்பேத முடையதாம். அவற்றுள்,

(1) விஷயானந்தம்—"மாது முதல் விடயவூதியங்க டமிற்றோன்றி வரல் விடய வானந்தம்." மாதர் முதலிய விஷயங்களால் தோன்றும் ஆனந்தம் விஷயானந்தமாம்.

(2) பிரஹ்மானந்தம்:—"கண்படையிற் றோன்றலோது பிரமானந்தம்." சுழுத்தி யவத்தையிற் றோன்று மானந்தம் பிரமானந்தமாம்.

(3) வாசனானந்தம்:—"துயிலொழிவிற் றோற்றமுடையதுதான் வாசனானந்தம்." நித்திரை தெளிந்தும் தெளியாதிருக்கும் நிலையில் தோன்று மானந்தம் வாசனானந்தமாம்.

(4) முக்கியானந்தம்:—"கேடுளவா மாதலுமில் லொருமல்மதி தோன்றுதல் முக்கியமாமானந்தம்." மனத்தினிடத்து வெறுப்புண்டாதலும் விருப்புண்டாதலு மில்லாத உபேட்சா புத்தியின்கண் தோன்றும் ஆனந்தம் முக்கியானந்தமாம்.

(5) நிஜானந்தம்:—"மனோலயயோகத்தினில் வந்துதித்தலேதமறு நிஜானந்தம்." சமாதியோகாப்பியாச காலத்தில் மனம் லயமாகு மிடத்து உண்டாகும் ஆனந்தம் நிஜானந்தமாம்.

(6) ஆத்மானந்தம்:—"பிரியவிடயத்துளியான் பிரியனெனத் தோன்றுதலான் மானந்தம்." பிரியமாகவுள்ள பொருள்களெல்லாவற்றினும் ஆத்மாவாகிய யானே எனக்கு மிகப் பிரியமானவன் என்று அறிந்தவிடத் துண்டாகும் ஆனந்தம் ஆத்மானந்தமாம்.

---

"உண்மை என்னும் அஸ்திவாரத்தின் மேல் உன்னுடைய ஒழுக்கங்களை நிருமாணஞ் செய்"

(7) அத்துவிதானந்தம்:-"விரியுமுல கனைத்தும் மெய்ம்மைதா னென்னும் விவேகத்திற் றோன்றுவதே யத்துவிதானந்தம்" இப்பிரபஞ்ச மனைத்தும் பொய் ஆத்மவடிவாகிய யானே மெய் (சத்தியம்) என்னும் ஞானம் உண்டான விடத்துத் தோன்றும் ஆனந்தம் அத்துவிதானந்தம்.

(8) வித்தியானந்தம்:—"அரியமறை முடிவாகும் வாக்கிய ஞானத்தாலாதலது வித்தியானந்தமென வறிக" வேதாந்தத்தில் பிரதிபாதிக்கப் பட்டுள்ள தத்துவமசி முதலிய மகாவாக்கிய விசார ஞானத்தா லுண்டாகும் ஆனந்தம் வித்தியானந்தமாம்.

(ஆனந்தம் ஒன்றே உபாதி பேதத்தால் எட்டுவகையாக விளங்குகின்றது. ஆத்மானந்தம், முக்கியானந்தம், நிசானந்தம், அத்துவிதானந்தம், வித்தியானந்தம் (ஞானானந்தம்) என்னு மிவ்வைவகையும் பிரஹ்மானந்தத்திலடக்கி ஆனந்தம் விஷயானந்தம், வாசனானந்தம், பிரஹ்மானந்தம் என மூன்று வகைப்படும் எனக் கூறப்படுதலு முண்டு.

"போகத்தில் வருசுகம் விடயசுகம் நித்திரைப் போதுளது பிரமசுகமாம்
மோகத்த னந்தலிற் சுகம்வா சனைச்சுகம் முழுப்பிரியம் ஆன்மசுகமாம்
யோகத்தி லுளதுமுக் கியசுகம் உதாசின முற்றசுகம் நிசசுகமதாம்
ஏகத்தை நோக்கலத் துவிதசுகம் வாக்கியமெ மூர்த்தசுகம் ஞானசுகமே."

எனக் கைவல்ய நவநீதங் கூறுவதுங் காண்க. இவற்றின் பொருளை விரிவாக அறிய விரும்புவோர் கைவல்யத்திற் காணலாம்.)

இனி, நித்தியத்திற்குப் பேதங் கூறப்புகின் அநித்தியங் கூறவேண்டி வரும். அநித்திய முடையது நித்தியமாகாது. ஆதலின் அது நித்தியத்தின் லட்சணத்திற்கு விரோதமானது. ஆகவே, நித்தியத்தில் பேதமின்றாம். ஏனெனில், அபாவம் (இன்மை) நான்கு வகைப்படும். அவை முன்னின்மை, பின்னின்மை, ஒன்றொன்றாகாமை, என்று மின்மை யென்பனவாம். இவை நான்கும் தோன்றிக் கெடுவனவாம். ஆதலின், இவ்வபாவங்கள் நித்தியத்துள் சேராத தன்மையினவாம்.

மேற்கூறிய முன்னின்மை, பின்னின்மை, ஒன்றொன்றாகாமை, என்று மின்மை என்னும் நான்கும் பிராகபாவம், பிரத்துவம்சாபாவம், அந்நியோந்நியாபாவம், அத்தியந்தாபாவம் எனத் தருக்க நூல்களில் கூறப்படும். இவற்றை யறிவது சாமானியர்க்குச் சிரமசாத்தியமா மாதலின் விரித்துக் கூறாது சுருக்கமாக எண்டுக் கூறுவாம்.

பிராக பாவம்=தோற்றமின்றி நாசமுடையதாம். உதாரணம்=நூல்களில் ஆடையில்லை என்றாற் போல்வதாம். பிரத்துவம்சா பாவம்=தோற்ற முடைத்தாய் நாசமின்றி இருப்பதாம். உதாரணம்; "ஓட்டில் குடமில்லை" என்றாற் போல்வதாம். அந்நியோந்நியா பாவம்=உற்பத்தி நாசமில்லாத அபாவமாம். உதாரணம்; குடம் ஆடையன்று என்றாற் போல்வதாம். அத்தியந்தாபாவம்=இவ்வும் உற்பத்தி நாசமின்றியதாம். உதாரணம்; வாயுவில் உருவமில்லை என்றாற் போல்வதாம். இதன் விரிவு தருக்க சங்கிரகம், தருக்க பரி பாஷை முதலிய நூல்களிற் காணப்படும்.) தோன்றிக் கெடுவனவாகிய அபாவங்கள் நித்தியத்தில் (பிரஹ்மத்தில்) இல்லையாமென்றறிக.

---

"அன்பு—அன்புண்டாக்கும்"

பூரணமும் மூவகைப் பரிச்சேதங் (முடிவு)கள் அற்றதாகலின் அதுவும் பேத முடைய தன்றாம். அம் மூவகைப் பரிச்சேதங்களாவன: கால பரிச்சேதம், தேச பரிச்சேதம், வஸ்து பரிச்சேதம் என்பனவாம். அவற்றுள்,

(1) கால பரிச்சேதமாவது:— "ஒரு காலத்துண்டின் றொருகாலத்திலை யெனல் காலப் பரிச்சேதம்." ஒருவஸ்து ஒருகாலத்திலிருந்து மற்றொருகாலத்தில்லையாயின் அது காலத்தால் பரிச்சேதம் (முடிவு) உடையதாம். அதுபோல, பிரஹ்மமானது, ஒரு காலத்திலிருந்து மற்றொருகாலத்தில் இல்லாமற் போவதன்றாம். ஆகலின் அது காலபரிச்சேத முடையதன்றாம்.

(2) தேசபரிச்சேதமாவது:— "தெரித்த வொரு தேயத்துண் டொரு தேயத்திலை யென் தேய பரிச்சேதம்" ஓரிடத்திலிருக்கும் வஸ்து மற்றோரிடத்தில்லையாயின் அது தேசத் (இடத்)தால் முடிவுடையதாம். அதுபோல, பிரஹ்மம் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திலில்லா திருப்பதன்று மாதலின் அது தேச பரிச்சேத முடையதன்றாம்.

(3) வஸ்து பரிச்சேதமாவது:—"ஒன்று மாகா தென்னும் கருத்தில்வரு வத்து பரிச்சேதமுமா மென்னக் கருதுக." ஒருவஸ்து மற்றொருவஸ்து வாதலின்றாமாகலின் அது வஸ்துவால் பரிச்சேதமுடையதாம். அதுபோல, பிரஹ்மம் ஒரு வஸ்துவாகி மற்றொரு வஸ்து வாகாமலிருத்தலின்றி எல்லாம் தானாகவே யிருத்தலால் வஸ்து பரிச்சேத முடையதன்றாம்.

## ஜீவாதி நாமாதி விவகார கற்பனை

இனி, முன் சித்தின் பேதமென்று சொல்லப்பட்ட ஜீவன் முதலியவற்றின் நாம ரூப விவகார கற்பனைகள் கூறப்படுகின்றன.

ஜீவன் சாக்கிராவத்தையில் வியஷ்டி (தனித்தனியாக ஒவ்வொரு ஸ்தூல) சரீரத்தையும், சொப்பனாவஸ்தையில் சூட்சும சரீரத்தையும், சுழுத்தியவஸ்தையில் காரண சரீரத்தையும் அபிமானித்து நிற்பன். அதனால் வெவ்வேறு பெயர்களையும் பெறுவன்.

அவற்றுள், சாக்கிராவஸ்தையில் ஸ்தூல சரீரத்தை அபிமானித்திருக்கும் பொழுது விசுவன் என் றழைக்கப்படுவன். சொப்பனாவஸ்தையில் சூட்சும சரீரத்தை அபிமானித் திருக்கும்பொழுது தைசதன் என்று அழைக்கப் படுவன். சுழுத்தியவஸ்தையில் காரண சரீரத்தை யபிமானித் திருக்கும் போது பிராஞ்ஞன் என் றழைக்கப்படுவன். இம் மூவகைப் பெயர்களுக்கு பரியாயப் பெயர்களுமுண்டு. (பரியாயப் பெயராவது, ஒருபதத்தின் அர்த்தத்தைத் தெரிவிக்கும் வேறொரு பதமாம். உதாரணம்: யானைக்குக் கரி வேழம் என்று சொல்லப்படும் பெயர்கள் பரியாயப் பெயர்களாம்.

(1) விசுவனுக்குள்ள பரியாய நாமங்கள்:—தூல வுடல் வியஷ்டி யபிமானி, வியவகாரிக ஜீவன், புத்திப் பிரதி பலன சைதன்யன், சிதாபாசன், விக்ஷேப ரூபன், பிரமாத்துரு, கர்த்துரு, போக்துரு, விஞ்ஞானமயன், குடும்பி, சரீரி, துவம்பத முக்கியார்த்தன் முதலியனவாம்.

(2) தைசதனுக்குள்ள பரியாய நாமங்கள்;—சூட்சும சரீர வியஷ்டி யபிமானி, பிராதிபாசிக ஜீவன், சொப்பன கற்பிதன் முதலியனவாம்,

(3) பிராஞ்ஞனுக்குள்ள பரியாய நாமங்கள்:—காரண சரீராபிமானி, அவித்தியோபகிதன், காரியோபாதிகன் முதலியனவாம்.

---

"குழந்தையின் உடல் உரம் சமுதாய உயிர் உரம்"

## ஆத்ம பேதம்

ஆத்மாவும் ஜீவாத்மா அந்தராத்மா பரமாத்மா என மூன்று வகைப்படும். அவற்றுள்

(1) ஜீவாத்மா:—"காய்ந்தன விரும்புபோ லுடம்பாதி கலந்தாறு குடும்ப மென் வழக்கிற், சார்ந்துளன் சீவான்மா எனப்படுவன்", அக்கினியிற் காய்ந்த இரும்பு போல் தேகம் முதலியவற்றோடு கலந்துள்ள குடும்ப விவகாரத்திற் பொருந்தி யிருப்பவன் ஜீவாத்மா எனப் படுவான்.

(2) அந்தராத்மா:—'தாமரை யிலையி னீர்போலத் தோய்ந்தன குடும்பப் பெரு விவகாரம் தோய்ந்திலன் அந்தரான்மாவாம்" தாமரையிலைத் தண்ணீர் போல குடும்ப விவகாரத்திற் பொருந்தியும் பொருந்தாமல் இருப்பவன் அந்தராத்மா என்னப் படுவான்.

(3) பரமாத்மா:—"போர்ந்துலகிற்குப் பரிதிபோல் சான்றாய் பொருந்திருேன்தான் பரமான்மா." உலகத்தில் நடக்கும் சகல விவகாரங்களுக்கும் சூரியன் சாக்ஷி மாத்திரமாக விளங்குதல் போல, ஜீவாத்ம அந்தராத்மாக்களின் சகல விவகாரங்களுக்கும் சாக்ஷி மாத்திரமாக விளங்குவோன் பரமாத்மா என்று சொல்லப் படுவான்.

## "ஆனந்தபோதினி" 80 பக்கங்கள்

:(o):

திருவருளின் பூரண கருணை கடாக்ஷத்தாலும், அன்பர்களின் பேராதரவினாலும் நமது "ஆனந்தபோதினி" மாதசஞ்சிகை தமிழ் நாட்டில் தனிப்பெரும் சிறப்போடு தலைமை ஸ்தானம் வகித்து வருகிறது. பல அன்பர்களின் வேண்டுகோட்கிணங்க 16-வது ஆண்டு ஆரம்பமுதல் 80-பக்கங்களோடு பற்பல சிறப்பியல்புகளுடன் "ஆனந்தபோதினி" வெளிவந்து அன்பர்களை மகிழ்விக்கும் என்ற நற்செய்தியைத் தெரிவித்துக்கொள்ளுகின்றோம்! இப்பொழுது இருந்துவரும் சந்தாதாரர்களின் தொகையோடு இன்னும் அதில் ஒரு பாதிப்பேர்களாவது அதிகப்படியான புதிய சந்தாதாரர்களாய்ச் சேர்ந்துவிட்டால் 96 பக்கங்களில் நமது சஞ்சிகையை வெளியிடலாம் என்றும் முடிவு செய்திருக்கிறோம். ஆதலால் நமது சந்தாநேயர் ஒவ்வொருவரும் ஒரு புதிய சந்தாதாரரைச் சேர்ப்பதில் கொஞ்சம் சிரத்தை எடுத்துக்கொண்டால் இது எளிதில் முடிந்துவிடும் என்ற நம்பிக்கை எமக்கு உண்டு. எமது ஆவலை அன்பர்கள் நிறைவேற்றுவார்கள் என்று பெரிதும் எதிர்பார்க்கிறோம்.

ப-ர்.

# வராஹமிசிரரின் கால நிலையில் ஓர் சங்கை.

(பால சோதிட வித்வான். வ. து. வேலுநாயகர்.)

ஆனந்தபோதினி தொகுதி 15-பகுதி 9-பக்கம் 541-ல் ஸ்ரீவராஹமிசிரரும், கவி காளிதாசரும் ஒரே காலத்தவரென்று கூறப்பட்டிருக்கின்றது. ஜோதிர் விதாபரணத்தில் கிரந்தாத்தியாய நிருபண பிரகரணத்தில் "தந்வந்தரி" என்றற்றொடக்கத்து 10-வது சுலோகத்தில் கூறியுள்ள நவமணிகளாகிய (1) தன்வந்தரி, (2) க்ஷபணகர், (3) அமரஸிம்மர், (4) சங்கு, (5) வேதாளபட்டர், (6) கடகர், (7) காளிதாசர், (8) வராஹமிகிரர், (9) வாருசி என்போர் ஒன்பதின்மரும் ஒரே காலத்தவர்கள் அல்லவென்பதும், வெவ்வேறு காலத்தவர்கள் என்பதும் ஐரோப்பியர்களிற் பலரும், இந்தியர்களிற் சிலரும் கொண்ட ஆழ்ந்த கருத்தாகும். இச்சுலோகத்தில் பல குறைகளிருப்பதாக இவர்கள் கூறுகின்றனர். எது எப்படியாயினும் ஸ்ரீவராஹமிசிராசார்ய ரவர்கள் தமது பஞ்சசித்தாந்தம் என்ற நூலில் "நான் இந்நூலை (பஞ்ச சித்தாந்தத்தை) சக வருடம் 427-ல் இயற்றினேன்" என்று தெளிவாக எழுதி யிருக்கின்றனர். ஆதலால் இவர் காலத்தின் விக்கிரமார்க்க சகாப்தம் 562, கிறிஸ்து பிறந்த பின் (கி. பி.) 505-என்பது தெற்றெனவிளங்குகின்றதை விவேகிகள் ஆழ்ந்துணர்தல் நலம். கால நிர்ணயம் செய்யப்போந்த ஆசிரியர் வராஹமிசிரனுருடைய பஞ்ச சித்தாந்தம் இவர் பிரத்தியட்சமாக சகனு 427-ல் இருந்தவரெனக் கூறியதைவிட்டு, சோதிர் விதாபரணத்தைப் பிரமாணமாகக் கொள்ளுவது பொருத்தமாகக் காணப்படவில்லை.

சில முக்கிய நியாய பிரமாணங்களால் கவி காளிதாசர் கி. மு. 57-வருடங்கட்கு முன் வசித்திருந்தவர் என்றுரைத்தல் சாலவும் பொருத்தமாகும். இவர் காளிதாச கவி ஜோதிர் விதாபரணம் கலிஞு 3068-ல் கி. மு. 34-ல் இயற்றியுளார் என்று அறியப்படுதலின் கி. மு. 58-ல் அரசாண்ட விக்ரமாதித்தன் சபையில் இருந்தார் எனக் கூறுதல் மிக நன்றும். ஆகவே ஸ்ரீவராஹமிசிரரும் காளிதாச கவியும் வெவ்வேறு காலத்தவர்கள் என்பது துணிபு. ஞாபகசக்தி (நினைவின் ஆற்றல்) சீர்கேடாக இருப்பவர்கள் அதனை திரும்ப நல்லபடி திருத்தி சீர்செய்து கொள்வதற்கும், நல்லபடி சீர்த்தியுடன் இருப்பவர்கள் பின்னும் தமது ஞாபகசக்தியை மேலாக விருத்திசெய்து கொள்ளுவதற்கும் கட்டுரை மிக்க அனுகூலமாக இருக்கு மென்பதில் எட்டுணையும் சங்கையில்லை; மிக எளிதில் பயன் பெற்றுய்யலாம்.

நமக்கு ஞாபகசக்தி—நினைவின் ஆற்றல் நன்றாக இல்லாவிடின் தக்க அரிய அவசரமான சமயங்களில் முக்கியமான விஷயங்கள் மனத்திற்கு (ஞாப

கத்திற்கு) வராமல் சமயம் கடந்த பின்னர் மனத்திற்கு வருமானால் அது கைசுட்ட பிறகு இலையைப் பிடித்துக்கொண்ட பாவனையாக முடியுமே யல்லாமல் எட்டுணையும் பயன் தருவதாக மாட்டாது. ஆதலால் மக்கட் பிறப்பை யடைந்த ஒவ்வொருவரும் இது விஷயத்தில் மிக்க சிரத்தை யுடையவர்களாய் இருத்தல் வேண்டும்.

சோதிட சாஸ்திர சம்பந்தமாக இந்த ஞாபகசக்தி சந்திரனுடைய பொறுப்பா யிருக்கின்றது. இதனை "சந்த்ரமாமநஸோஜாதஃ சக்ஷோ ஸூர்யோ அஜாயத" என்ற சுருதிவசனம் நன்கு விளக்கும். இலக்கனத்திற்கு 5 மிடம் இருதயம், மனம், புத்தி, சித்தம், ஞாபகம், நினைவு ஆகிய இவற்றிற்குரிய ஸ்தான மென்பதும், சந்திரன் இவற்றின் காரகனென்பதும் சோதிட சாஸ்திர சம்மதம். இதன் விரிவை எமது சொந்த பிரசுரமாகிய சோதிட கலாநிதி 2-3-4-5 வது வால்யங்களில் (தொகுதிகளில்) கர்ப்போற்பத்தி இலக்கின சோதனம் என்ற தலையங்கத்திலும், மகாத்மாகாந்தியார் ஜனன சாதகத்திலும் தெளிவாக எடுத்து விளக்கி இருத்தலின் ஆங்கு கண் டறியலாம். விரிவஞ்சி ஈண்டு எழுதவில்லை.

சிலர் ஞாபகசக்தி (நினைவின் ஆற்றல்,) விஷயங்களை கிரகிக்கும் வன்மை கடவுளுடைய அனுக்கிரகத்தினால் உண்டாக வேண்டுமேயன்றி, இத்தகைய கட்டுரைகளை வாசிப்பதனாலும், புத்தகங்களைப் படிப்பதனாலும் இச்சக்தி (ஆற்றல்) வாய்க்குமோ? என்று கருதுவார்கள். இதன் முழு உண்மைகளையும் அறிந்து தெரிந்து தெளியும் வரையில் சில விஷயங்களில் இப்படிப்பட்ட எண்ணம் உதிப்பது சகசமேயாம். எதிரொலி யந்திரம் மனிதர்களைப்போல் பேசும் என்று முதல் முதல் நம்பிக்கை யில்லாதவர்கள் நம்மில் அனேகர் உண்டு, பிரத்தியட்சமாக அவ் யந்திரம் பாடும்போதுகூட ஒரு சிலர்க்கு முழுநம்பிக்கை யிருப்பதில்லை; ஆதலால் இந்த அவதான சக்தி எல்லோருக்கும் வாய்க்கக்கூடியதா? என இதனிடத்திலும் சிலருக்கு சந்தேகம் ஏற்படக் கூடும் என்று யாம் எண்ணுகிறோம். ஆழ்ந்துணர்ந் தறிந்தால் மிக சொற்பகாலத்திற்குள் இதன் அற்புதமும், ஆற்றலும் நன்கு விளங்காமற் போகாது.

சற்று நல்ல ஞாபகசக்தி யுடையவர்களிற் சிலர் நாம் இதை வாசிப்பதிற் பயனில்லை, நமக்கு ஏற்கெனவேயுள்ள ஞாபகசக்தியே போதுமானதென எண்ணவும் கூடும். எவ்வளவு சிறந்த ஞாபகசக்தி யுடையவர்களானாலும் ஒன்றுக்கொன்று சம்பந்த மில்லாத 50-அல்லது 100 பெயர்களை ஒருதரம் வாசித்து ஞாபகத்தில் பதிய வைத்துக்கொள்ள வேண்டுமென்று நினைத்த பொழுது சிறிது மணிநேரம் படித்தாலுங்கூட தவறின்றி கூறுதற்கு இவர்கள் அருகராக மாட்டார்கள் என்பது நிச்சயம். இத்தகையோர்களே இக் கட்டுரையை நன்கு வாசித்தறிந்த பின் வரிசை தப்பியுள, இஷ்டம் போன்ற நூறு வாக்கியங்களை ஒரு தரம் சொல்லிய மாத்திரத்தில் தவறிப்போகுமே என்ற பயம் சிறிதேனு மில்லாமல் வரிசையாகவேனும், தலை கீழாகவேனும் அல்லது எத்தனைப் பெயர்களை நினைக்கினும் அத்தனைப் பெயர்களைத் தடையின்றி சொல்லுவதற்கு ஆற்றலுடையவர்க ளாவார்கள்.

---

"உன் வாயிலிருந்து வரும் ஒவ்வொரு வார்த்தைக்கும் மதிப்பிருக்க வேண்டும்"

மற்றும் அவர்கள் கடையிலிருந்து எத்தனைச் சாமான்களை வாங்கிவர வேண்டுமானாலும் பட்டிகையின்றி (பட்டிகை எழுதிக்கொள்ள அவசிய மின்றி) ஒரு தடவை கேட்டு ஒரு பொருளையேனும் மறந்து விடாமல் வாங்கி வருந்திறனுடையவர்களாவார்கள். மற்றும் சிலர் ஒரு கழகத்தினுள் (கூட்டத்தினுள்) சென்று ஏதேனும் ஒரு விஷயத்தைக் குறித்து அனேகவகையாய் சொற்பொழிவு செய்ய வேண்டியபோது கருதிய விஷயக்குறிப்பை காகிதத்தில் எழுதிக்கொண்டு அப்போதைக் கப்போது பார்த்துக்கொண்டு சொற்பொழிவு நிகழ்த்துகின்றார்கள், ஆதலின் அத்தகையோர் இக்கட்டுரையை படித்தறிவார்களானால் இப்படிப்பட்ட குறிப்பு எழுதிக்கொள்ள அவசியமில்லை, தாம் பிரசங்கம் செய்யவேண்டிய சங்கதிகள் அனைத்தும் மணிகள் கோர்த்த மாதிரியாக மனத்திற்கு வந்து கொண்டிருக்கும்.

(தொடரும்.)

---

# தமிழ் நாட்டுக் கும்மி

(பண்டித. பா. பக்கிரிசுவாமி செட்டியார் பாடியது.)

காவிரிப் பாவை வளர்நாடு —பேர்
காமருங் கன்னியர் வாழ்நாடு
பூவிரி சோலைகள் சூழ்நாடு —புவி
பூதலத்தில் சிறந்த நாடு
வாவிகள் நிறை வியன் நாடு —கற்ற
வாலறிவாளர் வதி நாடு
கோவில்கள் மிகு குரு நாடு—மூன்று
கொற்றவ ராண்ட வளநாடு
பந்த மகற்றும் பதிநாடு —அறு
பத்து மூவர் முத்திபெறு நாடு
செந்தமிழ் வாணர் புகழ்நாடு —நனி
செல்வியர் கற்பில் முதிர்நாடு
நந்தமிழ் வழங்கும் நன்னாடு —தக்க
நாகரிகங் கொண்ட தாய்நாடு
எந்தவிதத்திலும் அந்தமிகுந்த
எங்கள் தாயென்னும் தமிழ்நாடே.

---

"வாய்ச்சொல் வீரன் காரியச் சோரன்"

# புகழுடைய வாழ்வே மனித லக்ஷியம்.

(T. S. குழந்தைவேலன், திருவானைக்கா.)

மனிதனே! இப்புவியில் நீ புகழ்பெறவே ஜனித்தாய். புகழுக்காகப் பாடுபடு. அது கிட்டுந்தனையுஞ் சலியாது உழை. உள்ளஞ் சோம்பாதே. பெருமையைச் சிந்தியாதே. சுயநலங் கருதாதே. பிறருக்கு இதஞ் செய்வதே உன் அறிய வாழ்க்கையின் பெரிய நோக்கமாயிருக்கட்டும். உன் கஷ்டமென்னும் பனி இதோ உன் புகழென்னுஞ் சூரியனைக் கண்டு மறைந்தோடுகிறது பார்! உன் க்ஷேமகாலம் சமீபித்துவிட்டது. உற்சாகத்துடன் நில்! புகழை விரும்பு. அதுவே மனிதலக்ஷியம்.

***

மனிதனே! அதோ பக்ஷிகளைப்பார்! மிருகங்களைக் கவனி! அவைகள் தங்கள் வயிற்றை வளர்ப்பதற்காக எங்கெங்கு சுற்றி அல்லற்படுகின்றன பார்த்தாயா! நீயும் வயிற்றுக் கூழிக்காக காலமுழுதும் ஓயாது உழைத்து ஊதியத்தைத் தேடுகிறாய். இதில் உனக்கும் அந்த மிருக—பக்ஷிகளுக்கும் ஏதேனும் பேதமுண்டா? மனிதன் சோற்று ஜீவியத்திற்காக ஓடியலைவது போல மிருக—பக்ஷிகளும் மற்றுமுள்ள பிராணிகளும் திரிந்து பாடுபடுகின்றனவே. அப்புறம் மனிதன் எந்தவிதத்தில் மேம்பட்டவன்? மனிதப் பிறவியைச் சிலாகித்துச் சொல்லிக் கொள்ளுவதில் தான் என்ன பெருமை வந்துவிடப் போகிறது? எனவே புகழுக்காகச் சிறிது காலத்தையேனுஞ் செலவிடு. புகழை விரும்பு. அதுவே மனித லக்ஷியம்.

***

மனிதனே! கடவுள் எவரையும் அவரவர்கள் வாழ்நாள் முழுவதையும் பொருள் தேடுவதிலேயே செலவழித்து அவரவர்களே உண்டு அனுபவித்து மண்ணுலகிற் பிறந்ததின் பயனேதுங் காணாமல் விருதாவாய் மாண்டொழியுமாறு பிறப்பிக்கவில்லை. ஒருவருக்கொருவர் உபகாரமாய்—ஒத்தாசையாய்—நாட்டுக்கு நலம் விளைவிப்போராய்—புனித வாழ்வில் புகழ் பெறுவோராய்—இன்பமூட்டும் இனியராய்—அன்பின் வடிவினராய்—அருள் மனத்தினராய்—உரிய காரியங்களை உறுதியுடனியற்றும் ஊக்கமுடையோராய்த் திகழவேண்டுமென்றே பரம்பொருளாகிய கடவுள் பிரபஞ்ச மானிடர் ஒவ்வொருவரையும் இவ்வுலகிற் கனுப்பியுள்ளார். எவரும் லோகோபகாரமாக வாழவேண்டுமென்பதே கடவுளின் பிரீதி. அதன் மூலம் மனிதனுக்குப் பேரும் புகழும் உண்டாகிறது. எப்பயனுமில்லாதவன் இம்மண்ணில் பிறந்தென்ன, பிறக்காமலிருந்தென்ன? நேரிய வழிகளில் அரிய கிரியைகளை யியற்றி மனிதன் பிரசித்தியடையலாம். அதற்காக அல்லும் பகலும் முயன்று பாடுபடவேண்டும். புகழை விரும்ப வேண்டும். அதுவே மனித லக்ஷியம்.

---

"இறுமாப்புக்காரன் என்றேனும் வீழ்வான்"

மனிதனே! கடவுள் படைப்பில் எல்லோரும் ஒரு குணமுடையோரா யில்லை. ஏன்? இதைச் சிந்தனை செய்து பார்! பிறவியிலேயே அநேகருக்கு—ஏன்? எல்லோருக்குமே—ஒவ்வோர் அபூர்வ சக்தியை—திறமையை—கடவுள் அருளியிருக்கிறார். எதற்காக? அவனவன் தத்தம் தேகத்தை நன்கு போஷணை செய்து கொள்வதற்காகவும், பெண்டாட்டி பிள்ளைகளைக் காப்பாற்றுவதற்காகவும் அதன் மூலம் நிறைய பணஞ் சம்பாதித்துக் கொள்ளட்டுமென்றா? மாடிமேல் மாடி கட்டிக்கொண்டு தின்று தலையணையோடு உல்லாசமாய் வாழ வழியுண்டாகட்டுமென்றா? பின் என்ன? அவன் அரிய சக்தியின் ஒளியினால் அறிவீனர்களின் அறியாமைக்கண் திறக்கட்டுமென்றுதான்—வறுமை மாந்தர் வயிறு பிழைக்க வழிவகை கண்டு வாழட்டுமென்று தான்—மாறுபாடுற்ற மக்கள் மன்னுலகில் மன்னுவதை யோர்ந்து நிகழ்த்தும் மார்க்கத்தை யறியட்டுமென்று தான்—நாடு சீர்ப்பட்டு, நேர்ப்பட்டு நலம் பெறட்டுமென்றுதான். இத்தனைக்கும் அவர்களடையும் இலாபமென்ன தெரியுமா? அவர்களுக்குக் கடவுளீயும் பரிசு யாது தெரியுமா? அதுதான் புகழ், புகழ்! ஆகவே புகழை விரும்பு. அதுவே மனிதலக்ஷியம்.

***

மனிதனே! பணத்தினால் வரும்புகழ் வெறும்புகழ். குணத்தினால்—உடலுழைப்பினால் கிடைத்திடும் புகழ் விலையேறப் பெற்றது—எல்லோரும் எளிதில் அடைய வியலாதது. முயற்சியும் மனோவலிமையு முடையோர்க்கு எதுவும் பிரமாத மல்ல. ஆகாததும் அவருக்காகும். கூடாததுங்கூடும். முயற்சியின் பெருமை யிது. முயன்று முயன்று முடிவு காணுந்தனையுஞ் சலியாது உழைத்துச் செல்லுவதே புகழடைவதற்கான நேரிய பாதை. தொடங்கும் காரியத்தில் வெற்றியே பெறுவதெனத் தீர்மானஞ் செய்து கொண்டு, அதன்படி நிறைவேற்றி உனக்கும் பிறருக்கும் நலன் விளைவித்து மகிழ்வு பெறு. அதுவே உன்னைப் புகழ்நிலையில் நிறுத்தும். புகழை விரும்பு. அதுவே மனிதலக்ஷியம்.

***

மனிதனே! உண்மையான புகழ்பெற்றவன் பெருமைப்படுகிறானென்கிறாயா? மமதை யடைகிறானென்கிறாயா? இல்லையில்லை. அவன் வாழ்க்கையின் நோக்கம், சதா உழைப்பதிலேயே சென்று உத்தம கைங்கரியங்களைச் செய்திட வைக்கிறது. புகழ்ச்சி—இகழ்ச்சி, இன்பம்—துன்பம் இவற்றையெல்லாம் அலக்ஷியஞ் செய்து ஒதுக்கிவிடுகிறான். எதுவரினும் அநுபவித்திட இசைகிறான். தன்னைப் பிறர் புகழவேண்டும்—தலையில் தூக்கிக் கொண்டு ஆடவேண்டுமென்னு மெண்ணம் கிஞ்சிற்றும் அவன் மனதில் காணோம். தன்னால் ஒருவரேனும் இதம் பெற்றிருந்தால் அதுவே தன் ஜென்மசாபல்யமென்று ஆயிரம் புகழிலுமரிய புகழாய் மதித்திடுகிறான். உத்தமப் புகழும் அவன் வேண்டாமலே அவனிடம் ஒளிவீசுகின்றது. கடவுள் ஆசிரும் அவனுக்குக் கிட்டுகிறது. அழியாத ஆநந்த வாழ்வில் அமர்ந்து களிக்கிறான். நீயும் புகழில் ஆசைகொண்டு உறுதியுடன் உழைத்தால் உயர்வாய்—உன்னதம் பெறுவாய். அதற்காகவே புகழைவிரும்பு. அதுவே மனிதலக்ஷியம். புகழ்வாழ்க. அதைப் பெறும் பிரயத்தனம் உன் கையிலிருக்கிறது. மனிதனே! முயலுக இன்றே!

தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று. — நாயனார்.

# மாதர் உலகம்



## பெண்களின் சாமுத்திரிகம்

**(லி. ரா.)**

**கண்கள்:—**

1. தாமரை இதழ்களுக்கு நிகராகிய கண்களையுடைய பெண் எல்லாச் செல்வங்களையும் அநுபவிப்பாள்.

2. அன்னப் பார்வை பொருந்தி யிருக்கும் பெண் பாவி. கணவனைத் தூற்றுவாள்.

3. இடது கண்ணில் கரிய மச்சங்களைப் பொருந்திய பெண்மணி பாக்கியவதி.

4. கண்களில் வெள்ளை விழிகளின் மீது இரத்த நாடிகளை விசேஷமாகப் பொர்ருந்திய பெண் மகாராணிக்கு ஒப்பான எல்லாச் செல்வங்களையும் அநுபவிப்பாள்.

5. இலைப்பச்சை நிறமாவது, இளங்கோதுமை நிறமாவது உள்ள கண்களையுடைய பெண் தீய ஒழுக்கம் வாய்ந்தவளாக இருப்பாள்.

6. பூனைக்கண்களைப் போன்ற நேத்திரங்களையுடைய பெண் முன்கோபம் உள்ளவளாக இருப்பாள்.

7. தேன் நிறக் கண்களையுடைய பெண்மணி மிகுந்த பாக்கியவதியாயிருப்பாள்.

8. உருண்டை வடிவான கண்களையுடைய பெண் ராஜமகிஷிக்கு நிகரான போக பாக்கியங்களை அநுபவிப்பாள்.

9. உயிர் அற்றுப்போய் களைகெட்ட கண்களையுடைய பெண் ஜாதிக் கட்டுப் பாட்டினின்றும் நீங்குவாள்.

10. கண்களின் உட்புறம் செவந்தும், வெள்ளை விழி பசுவின் பாலைப் போன்று வெண்மையாகவும், கருவிழிகள் மிகுந்த கருமையாகவும், கண்ணிமைகளில் கரிய மயிர்களும் பொருந்திய பெண்கள் கல்வி—செல்வம்—புகழ்களைப் பொருந்தி வாழ்வார்கள்.

11. ஒளிததும்பும் மெல்லிய கண்களையுடைய பெண் ரத்தினாபரணங்களைத் தரிப்பாள்.

---

"திருடனைப் பிடிக்கத் திருடனையே பிடி."

பற்கள்:—

1. பற்கள் பளிங்கைப்போல் வெண்மையாகப் பொருந்தப் பெற்ற பெண்மணி நீண்ட ஆயுளும் செல்வமும் வாய்ந்து புகழைத் தேடுவாள்.

2. பற்கள் வரிசை தப்பிக் கீழ்மேலாகப் பொருந்தப் பெற்ற பெண்கள் துன்பம் அநுபவிப்பார்கள். பிறமதத்தைத் தழுவக் கூடியவர்களா யிருப்பார்கள். ஆனால் மற்ற அங்கலக்ஷணங்கள் சரியாகப் பொருந்தியிருந்தால் மேலே கூறிய குற்றங்கள் நேராதிருக்கலாம்.

3. பற்கள் பெரியவைகளாக இருக்கும் பெண்களுக்குச் செல்வம், கல்வி முதலியவைகள் வாய்க்கமாட்டா.

4. மல்லிகை அரும்புகளுக்கு நிகரான பற்கள் வாய்ந்த நாரீமணி, செல்வம் உள்ள கணவனை மணந்து எல்லாச் செல்வங்களையும் பெற்று மிகுந்த இன்பமயமான வாழ்க்கையை நடத்துவாள்.

5. பசுவின்பாலுக்கு ஒப்பான வெள்ளிய பல் வரிசை சமமாக வாய்ந்த பெண் அஷ்ட ஐசுவரியங்களையும் அநுபவிப்பாள்.

6. பற்கள் மென்மையாய் விளங்கும் பெண்மணிக்குப் பூமி, வீடுகள், பசுக்கள், வேலைக்காரர்கள் முதலான சம்பத்துக்கள் நிறைந்திருக்கும். நோயற்ற வாழ்வைப் பெற்று, கல்வியும் புகழும் பொருந்தி வாழ்வாள்.

7. வெண்மை நிறம் வாய்ந்து ஒளி வீசும் பற்களை யுடைய பெண் பதிவிரதையாகிக் கணவனுடைய காதலுக்குப் பாத்திரம் ஆவாள். பிறருக்கு உபகாரம்செய்யும் விஷயங்களில் ஊக்கமும் உற்சாகமும் கொண்டு விளங்குவாள்.

8. கத்தியைப்போல் பதம் பொருந்தியிருக்கும் பற்களையுடைய பெண்ணுக்கு குடும்ப சுகம் அதிகம். இன்பம் தரும் மக்கள் உண்டாவார்கள். நல்ல ஆரோக்கியம் இருக்கும். சகல சம்பத்தும் உண்டாகும்.

9. பதம் இல்லாத பற்களையுடைய பெண் மலடியாவாள். தேய்ந்த பற்களையுடைய பெண் துன்பங்களை அநுபவித்துக்கொண்டிருப்பாள்.

10. ஒருபெண் எவ்வளவு அழகான பற்களை வாய்ந்திருக்கிறாளோ அவ்வளவு சுகத்தை அநுபவிப்பாள்.

11. பல் மேல் பல்—அடுக்குப் பல் வாய்ந்த பெண் பாலியத்திலேயே தாயை இழப்பாள்.

க்ருஹ லக்ஷ்மி

---

"குளிர்ந்த நீரைவிட நல்ல வார்த்தைகட்குக் குளிர்ச்சி அதிகம்"




(624-ம் பக்கத் தொடர்ச்சி)

நண்பன்:—சரிதான் உங்களுக்கு ஹாஸ்டல் 'பில்' எவ்வளவு ஆயிற்று?"

ராம:—"நாற்பத்தாறு ரூபாய்கள். இன்னும் போன மாசம் பாக்கி கூட இருக்கிறது. மொத்தம் அறுபது ரூபாய்களுக்கு மேல் ஆகும்போலிருக்கிறது. உங்களுக்கு இருபத்தைந்து ரூபாய் கொடுக்கவேணும். ரூ $14\frac{1}{2}$ காபி ஹோட்டலுக்கும், ரூ 7-6-0 வெற்றிலை பாக்குக் கடைக்கும், இன்னும் ஐந்தாறு ரூபாய்கள் சில்லரைக் கடனுக்கும் கொடுக்கவேணும். பணத்துக்கு ஊருக்கு எழுதியிருக்கிறேன். வரவில்லை இன்னும். அதைத்தான் ஆலோசனை செய்துகொண்டிருக்கிறேன்."



நண்பன்:-"ஆமாம்! எல்லாருடைய பிழைப்பும் அப்படித்தான் இருக்கிறது. எப்படி இழுக்கிப் பிடித்தாலும் ஆகிறது ஆகிக்கொண்டுதான் இருக்கிறது. ஹாஸ்டல் டியூஸ் கட்டவேணும் என்று உங்களுக்கு ரிமைண்டர் செய்யவந்தேன்."

ராம:—"எக்ஸ்க்யூஸ் மீ. மணி வந்தவுடனே ........."

நண்பன்:—"த்யாங்க்யூ. ஆனால் போய் வருகிறேன்."

ராமகிருஷ்ணன் வீட்டிலிருந்து வரும்போது ரகளை செய்து தகப்பனை வெருட்டியதினாலே ரூபாய் இருநூறு கொடுத்தார். ரயில் சார்ஜும் சில்லரைச் செலவுகளும் போக காலேஜ் 'டர்ம் பீஸ்' கட்டுவதற்குச் சரியாகப் போய்விட்டது அந்தப் பணம். விடிந்தது முதல் எல்லாம் பணத்தின் மேல் வேலை. பணமில்லாதவனுக்குப் பட்டணத்தில் வேலை என்ன? மேலும், கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்ள எவ்வளவோ ஆர்ப்பாட்டங்கள்

"தூய உள்ளம் தூய செய்கையின் தாய்"

வேண்டும். கடனாவது கிடைக்குமா என்றால், இருக்கிற ஆசாமிகள் எல்லாம் இதே தினுசு. எல்லோரும் பணத்தின் மேலேயே நடக்கின்றவர்கள். தவிர, இந்த மாதத்தில் கொடுத்தால், அடுத்த மாதத்தில் கொடுத்துவிட வேண்டியிருக்கிறது. கொடுக்காவிட்டால் அவர்களுக்கும் திண்டாட்டம் தான்! ராமகிருஷ்ணனுக்குப் பெரிய நெருக்கடி ஏற்பட்டுவிட்டது. தகப்பனுருக்கு எத்தனை கடிதங்கள் எழுதினாலும் பதிலே கிடையாது. என்ன செய்வான்? இந்தச் சங்கதிகள் அவர்களுக்குத் தெரிந்தால் மரியாதைக் குறைவு.

இரவு பத்து மணி ஆயிற்று. தனியாக உட்கார்ந்து கொண்டு தகப்பனுருக்குக் காரமாய்க் கடிதம் எழுதினான். இரண்டு மூன்று நாட்கள் கழிந்தன—ஒருவாரமும் ஆகப்போகிறது. பதில் இல்லை. மனம் பற்பல விதமாகப் போகத் தலைப்பட்டது. பிறகு ஒரு கடிதம் வந்தது. அது ஒரு கவர். அதைக் கிழித்துப் படித்தான். அதில் உள்ள விபரம் வருமாறு:—

ஆசீர்வாதம். உன் கடிதம் கிடைத்தது. என்ன பதில் எழுதுவது என்று ஒன்றும் தோன்றாததால் கடிதம் எழுதவில்லை. நீ போகும் போது ரூ 200 வாங்கிக்கொண்டு போனாய். இன்னும் ஒரு மாதங்கூடச் சரியாக ஆகவில்லை. இதற்குள் ரூ 100 வேணும் என்று எழுதியிருக்கிறாய்! இப்போது இங்கும் பணக்கஷ்டம் அதிகம்.

நிற்க "பணம் உங்களிடம் இல்லாத போனால் கடன் வாங்கியாவது, ஆஸ்தியை விற்றாவது அனுப்ப வேண்டும்" என்று எழுதுகிறாய். பெற்ற தகப்பனுருக்கு இவ்வளவு அலட்சியமாய்—வாய்க்கு வந்தபடி பைத்தியகாரத்தனமாய்—உளறிக்கொட்டிக் கடிதம் எழுதுகிற உன்னைப் போன்ற மகன் இருப்பதும் இறப்பதும் ஒன்றே. உன் சம்பந்தம் எனக்கு ஒன்றும் வேண்டியதில்லை. கடன் செய்வதற்கோ, ஆஸ்தியை விற்பதற்கோ இங்கே உனக்கு ஒன்றும் கிடையாது. நீ படித்தாலும், படிக்காவிட்டாலும், செத்தாலும் எனக்கு அதைப்பற்றி ஒன்றும் கவலை இல்லை. உன் இஷ்டம்போல் செய்து கொள். இந்த விபரம் நன்றாய்த் தெரிந்து கொள்ளவும்.

இங்ஙனம்,
பஞ்சாபகேச ஐயர்.

கடிதத்தைப் படித்து முடித்தான், மெய்ம்மறந்தான் ஏதோ மயக்கம் வந்தது போலாயிற்று. உடம்பு வியர்த்தது. பெரு மூச்சு விட்டான். ஒன்றும் தோன்றவில்லை; அப்படியே உட்கார்ந்து விட்டான் அரைமணி நேரம்! தகப்பனார் இந்த விதமாகக் கடிதம் எழுதுவார் என்று நினைக்கவே இல்லை! இதுவரை நடந்து வந்தது போலவே வெருட்டினால் விளையாமல் போகிறாரா என்று நினைத்தானே யொழியக் கொடி முறுக்கேறி அறுந்து போகிற வரை இழுக்கலாம் என்று ராமகிருஷ்ணன் நினைக்கவில்லை. சிறிது நேரத்தில் துக்கம் கோபமாக மாறிவிட்டது. தனக்குள் "இதென்ன விபரீதம்! இல்லாதவர்கள் இல்லை என்று அழுவது, இருக்கிறவர்கள் இந்தமாதிரி அழுவது! எதற்காக இவ்வளவு கஞ்சத்தனம்? நாங்கள் அநுபவிக்கிறதற்கு இல்லையென்றால், எதற்காக இந்த நூற்றுக் கணக்கான ஏக்கர்கள்? ஆயிரக் கணக்கான ரூபாய்கள்? எங்கள் பாட்டனார் என்ன தலையில் வாரிக் கட்டிக் கொண்டு

போனார்—அதுபோல இவரும் கட்டிக்கொள்ள? எதற்காக இவ்வளவு கனத்தனம்! நான் ஏதாவது கெட்ட வழிகளில் கண்டபடி செலவு செய்து கொண்டு திரிந்தால் ஒரு வேளை அவர் நினைப்பது சரி! அவசியமான செலவு செய்து கொண்டு—மற்றவர்களைவிடச் சிக்கனமாகவே, இருக்கிறதை வைத்துச் சரிப் படுத்திக்கொண்டு வருகிறேன். ஆதியிலிருந்து நான் இங்கே வருவது அவருக்கு இஷ்டமே இல்லை! எப்படியோ ஒரு விதத்தில் இந்த கோர்ஸை முடித்துக்கொள்ளலாம் என்றால் அது நடக்கிற வழியாயில்லை. அடிக்கடி பயமுறுத்தல்! இனிச் செய்யக்கிடப்பது என்ன? யார் சொன்னாலும் கேட்கமாட்டார் அல்லவா? படிப்பை நிறுத்திவிட வேணும் போலவே தோன்றுகிறது. படிப்பை நிறுத்தினால், பார்க்கிறவர்கள் எல்லாரும் "ஏன் நிறுத்திவிட்டாய்?" என்றால்என்ன பதில்சொல்லுவது? மாமியார் அடித்தது அல்ல, நாத்தியார் சிரிப்பதல்லவா பெரிய அவமானம்? நாலுபேருக்கு முன்னால் எப்படி தலை நிமிர்ந்து போவது? போகட்டும், பாகம் பங்கிட்டுவிடவேணும் என்றால் எப்படி முடியப்போகிறது? தகப்பன்மாரே இன்னும் பிரித்துக் கொள்ளவில்லையே? சரி, கமலம் தன் நகைகளைச் சந்தோஷமாய்க் கொடுக்கிறேன் என்றாள் அல்லவா? அவைகளை வைத்துப் படித்துக் கொள்ளலாம் என்றால் எந்த முகத்தை வைத்துக் கொண்டு மாமனார் வீட்டுக்குப் போவேன்? எல்லாப் பிழைப்பும் நெருக்கடியிலேயே வந்து சேர்ந்தது. வீட்டுக்குப் போகாமல் இரண்டில் ஒன்று முடிவு செய்ய முடியாது.

***

சந்திர சேகர ஐயர் திண்டுக்கல்லில் டிப்டி கலெக்டர். இவருக்கு ஐசுவரியத்தில் ஒன்றும் குறைவில்லை. மூன்று பெண்களும், நான்கு ஆண்களும் இருக்கிறார்கள். இனி இதைவிட உலகத்தில் என்ன வேண்டும்? அவருக்குக் குழந்தைகள் என்றால் மிகவும் பிரியம். நான்கு குழந்தைகளும் சுற்றிலும் உட்கார்ந்திருந்தால் அளவு கடந்த மகிழ்ச்சி பொங்கிவிடும் அவருக்கு. தம்மோடு மக்கள் சர்க்யூட் போகும்போது கேம்ப்புக்கு வந்தால் அவருடைய ஆனந்தத்துக்கு எல்லை கிடையாது. நல்ல சுகம் அனுபவித்தார் அநேக காலம்.

கால சக்கரம் எப்போதும் ஒரே மாதிரியாய் இருப்பதில்லை. கடவுளுக்கே பொறுக்க முடியவில்லை என்று நினைக்கும்படி குடும்பத்தில் துக்கம் ஏற்பட்டது. திடீரென்று ஐயருடைய மனைவிக்குக் காலராக் கண்டது—காலமும் சென்று விட்டாள். பாவம்! ஐயருடைய துக்கத்துக்கு அளவே இல்லை. அந்த அம்மையைக் கலியாணம் செய்து கொண்ட பிறகுதான் அவர் முன்னுக்கு வந்தார். அந்த அம்மையும் லக்ஷ்மிக்குச் சமானம். கணவன் மனம் அணுவளவு கோணாமல் குடும்ப ரதத்தை நடத்தி வந்தாள். மனைவி போனது அவருக்கு வலது கை போனது போல் ஆயிற்று. மக்கள் எல்லாரும் அறியாக் குழந்தைகள். இவர்கள் எல்லாரையும் வளர்த்து வாலிபம் செய்யும் பாரம் ஐயர் தலையில் விழுந்தது. ஐயர் தைரியமும் சாந்தமும் ஒரு வடிவெடுத்தாற் போல் விளங்குபவர். உலகம கலங்கினும் அவர் நெஞ்சம் கலங்காது. "எங்கள் தாயார் இல்லாததினால் அல்லவா எங்களுக்கு இந்த மாதிரியான கஷ்டம் வந்தது?" என்று எங்கே மக்கள் ஏங்கி விடுவார்களோ என்று கவலை கொண்டு

மிக அருமையாய் வளர்த்து வந்தார். அவர்கள் இஷ்டம்போல் நடந்து கொள்ளுவார். தாயோ இல்லை; பெண் மக்களைக் கொஞ்சம் நல்ல இடம் பார்த்துக் கொடுத்து விட்டால், அவர்களுக்கு எந்தக் காலமும் கஷ்டம் வராது என்று நினைத்து, நமது ஐயர், பெண்களின் விஷயத்தில் வரதக்ஷிணை வகையராக்களுக்குப் பின் வாங்காமல், தமக்குச் சாத்தியமான அளவில்—கோலாகலமாய்—பணக்காரர் சம்பந்தங்களே தேடிக்கொண்டார்.

கமலம் சந்திரசேகர ஐயரின் மூன்றாவது புத்திரி. மாமியார் ஊர் தாராபுரம். பஞ்சாபகேச ஐயரின் நான்காவது மகனுக்குக் கலியாணம் செய்து கொடுத்தார்கள். பஞ்சாபகேச ஐயருக்கு நல்ல பூஸ்திதி உண்டு. லேவாதேவியும் ஜோராக நடந்து வருகிறது. ஆனல் வடிகட்டின கஞ்சர் என்ற பிரக்கியாதி எங்கும் பரவியிருக்கிறது. பணத்தின்மீது உள்ள மோஹம் மக்கள் மீது இல்லை என்று எல்லாரும் சொல்வார்கள். தந்தை எத்தகையவராயிருந்தாலும் வீட்டில் தாயார் இருந்தால் யாருக்கு எதைச் சொல்ல வேணுமோ அதைச் சொல்லி எல்லாம் சமாதானமாகச் செய்து கொண்டிருப்பாள். அந்தப் பாக்கியம் பிள்ளைகளுக்கு இல்லாமல் போய்விட்டது. அவர்கள் பெரியவர்களாகிக் குடும்பஸ்தர்களாவதற்கு முன்பே தாயார் இறந்து போய் விட்டாள். குடும்பம் நாயும் பேயும் வாசம் செய்யும் இடம் ஆயிற்று. ஒரு பிள்ளையாவது பெரிய படிப்புக்குப் போகவில்லை. மேலே படிக்கத் தொடங்கி இரண்டொரு வருஷம் கழிந்த பிறகு தகப்பனர் பணம் அனுப்புவதை நிறுத்தியவுடன், செய்வது ஒன்றும் தோன்றமல் புஸ்தகங்களை மூட்டை கட்டிக்கொண்டு எல்லாரும் வீடு வந்து சேர்ந்தவர்களே. அநுபவித்தால் ஒழிய யாருக்கும் உண்மை விளங்காது. வீட்டில் தகுந்த பெரிய ஸ்திரீகளின் ஊத்தும் பொறுப்பும் இல்லை என்றால் அங்கே காரியங்கள் எவ்வாறு நடந்துகொண்டிருக்கும் என்பதை விவரிக்கவேண்டியது அநாவசியம்.

பஞ்சாபகேசஐயருக்கு ஒன்றும் குறைவில்லை—அவர்கள் மரியாதையாய்க் காலக்ஷேபம் செய்யவும், நாலுபேர் போனலும் கவனித்து மரியாதை செய்யவும் சக்தி இருக்கிறது என்று நினைத்து சந்திரசேகர ஐயர் சம்பந்தம் செய்தார். சிலகாலம் கழிந்தது. ஒன்றன் பின் ஒன்ருய்ச் சங்கதிகள் எல்லாம் வெளிப்பட்டன. வெளிப்பட்டால் இனிச் செய்யக்கிடப்பது என்ன இருக்கிறது! அநுபவிக்க வேண்டியதே. பெரியவர்கள் தெரியாமலா சொன்னர்கள் "பெண்ணைப் பத்து விதமும் பார்த்துக் கொடு" என்று. ஆழம் தெரியாமல் காலை விட்டுக்கொண்டால் அவஸ்தை அநுபவித்துத் தானே தீரவேண்டும். முன்பே தெரிந்து சம்பந்தம் செய்யவேண்டும். கமலம் குடும்ப நிர்வாகத்துக்கு வந்தாள்.

காதலன் பட்டணத்தில் படித்துக்கொண்டிருக்கிற படியால் பெரும்பாலும் பிறந்த அகத்திலேயே இருப்பது வழக்கம். இப்போது கமலம் கர்ப்பவதியாய் விளங்குகிருள். இந்த விஷயம் தெரிந்து, வந்து போய்க்கொண்டிருக்கிற பந்துக்களுக்குக் கணக்கில்லை. இதற்கு முன்பு "இன்னும் காதலர் படிப்பு முடியவில்லையே, நான் அவருக்கு கைவிலங்கு கால் விலங்காக அல்லவா இருந்துகொண்டிருக்கிறேன்" என்று கமலத்துக்குப் பெரிய கவலை;

---

"தூங்குகிற புலியைத் தட்டி எழுப்பாதே"

சாந்தி முகூர்த்தம் நடந்தும் காதலனை விட்டுப் பிரிய நேர்ந்து விட்டதே என்று அல்லும் பகலும் அதே சிந்தனை. "நகச் சுற்றின் மீது உலக்கை இடி" என்பதற்கிணங்க இப்போது இந்த விசனமும் வந்து சேர்ந்தது. மாதங்கள் நெருங்க நெருங்க இது ஒரு பெரிய கண்டமாகத் தோன்றியது கமலத்துக்கு. விடிந்தாற் பொழுது மறையாது, பொழுது மறைந்தால் விடியாது; மிகவும் மெலிந்து போனாள். கமலம் தைரியமாயிருப்பதற்காக, தினந் தவறாமல் டாக்டர் வீட்டுக்கு வந்து விட்டுப் போகும்படி ஏற்பாடு செய்தார் தந்தையார்.

ஒருநாள் இரவு—மூன்றாவது ஜாமம்—கிழக்கே வெளுத்து வருகிறது. இன்னும் இருட்டாகவே இருக்கிறது. அங்கங்கே யாரோ இரண்டொருவர் மாத்திரம் வீதிகளில் நடமாடிக்கொண்டிருக்கிறார்கள். உறக்கத்தில் இருக்கிற உலகத்தை விழிக்கச் செய்வதுபோல் காகங்கள் கா! கா! என்று கத்திக்கொண்டிருக்கின்றன. சந்திரசேகர ஐயர் முன் 'வராண்டா'வில் ஒரு நலிச் சேரில் படுத்துக்கொண்டிருக்கிறார். அப்பப்போது மாத்திரம் குறட்டை விட்டுக்கொண்டு, கொஞ்சம் நின்று நின்று துள்ளி விழுந்து எழுந்து, இங்கும் அங்கும் திரும்பிப் பார்ப்பதும், மறுபடியும் படுத்துக் கொள்ளுவதுமாயிருக்கிறார். ஏதோ ஒரு ஆவலும் ஆத்திரமும் அவரைச் சரியானபடி தூங்கவிடவில்லை. நெஞ்சு படபடவென்று விரைந்து அடித்துக்கொண்டிருக்கிறது. இதற்குள் வீட்டுக்குள் இருந்து அவருடைய சகோதரி சுப்பம்மாள் வந்து "உனக்குப் பேரன் பிறந்திருக்கிறான்" என்று சொல்லிவிட்டு வேகமாய் உள்ளே போனாள். ஐயர் சட்டென்று எழுந்து "கமலத்துக்குக் குழந்தை பிறந்துவிட்டதா! பிள்ளைக் குழந்தையா? சரி 'டைம்' என்ன ஆயிற்று என்று யாருங்களடா!" என்றார்.

விடிந்தது. வீட்டில் எல்லாருக்கும் பரமானந்தம். பத்து நாள் கழிந்தன. வீட்டில் எப்போது பார்த்தாலும் ஒரே சந்தடி. ஐயர் அவர்களின் தயவைச் சம்பாதிக்க வேணும் என்ற தபேதார்கள், சேவகர்கள் எல்லாரும் வந்து "மஹாராஜ்! தங்களுக்குப் பேரன் பிறந்திருக்கிறார். வெகு சந்தோஷம்! தங்களுக் கென்னகுறை நல்ல மஹாராஜா!" என்று சந்தோஷங்காட்டிக் கேட்கிறவர்களுக்குச் சொல்லிச் சொல்லி ஐயரின் வாய் காய் காய்த்து விட்டது—வலியுங் கண்டு விட்டது. ஜோதிடர்கள்—பெரிய பெரிய பட்டங்களை வைத்துக்கொண்டிருக்கிறவர்கள், கடுக்கன்கள், மோதிரங்கள், கைக்கடகங்கள், சால்வைகளுடன் அலங்காரத்தோடும் அட்டஹாஸத்தோடும் வந்து, தீர்க்கமாய்க் கணித்து, ஒருவரை விட ஒருவர் மிஞ்சும்படி, பழைய காலத்து ராஜாக்களுக்குக் கட்டியங் கூறுபவர்களைப் போலப் புகழ்ந்துவிட்டுக் கொடுத்ததை வாங்கிக்கொண்டு போனார்கள். இப்பேர்ப்பட்ட பெரிய ஜாதகத்தைப் பார்த்தது கிடையாது என்று ஜோதிடர்கள் சொல்லும்போது கேட்ட தாய் தந்தையரின் சந்தோஷம் எப்படி இருந்திருக்கும் என்று வாசகர்கள் ஊகித்து அறிந்து கொள்ள வேண்டியதே.

***

இரவு பன்னிரண்டு மணி. எங்கும் ஒரே காரிருள். பிரளய காலம் வந்து விட்டதோ என்று நினைக்கும்படி இடியும், மின்னலும் வானத்தையும்

---

"அற்ப ஸ்நேகம் பிராண சங்கடம்"

நிலத்தையும் கிடுகலங்கச் செய்கின்றன. ஆகாயம் முழுவதையும் கார் மேகங்கள் கவிழ்ந்து மூடியிருக்கின்றன. சிறு தூறலும் தூறிக்கொண்டிருக்கின்றன. எங்கு பார்த்தாலும் ஜீவ சஞ்சாரமே கிடையாது. ஒரு ஆந்தை மாத்திரம் ஓயாமல் கத்திக்கொண்டிருக்கிறது.

ராமகிருஷ்ணனுக்கு இந்த உலகப் போக்கே ஒன்றும் பிடிக்கவில்லை. வெறி பிடித்தவனைப்போல் படுக்கையை விட்டு எழுந்திருப்பதும், உட்காருவதும், மறுபடியும் படுத்துக் கொள்ளுவதும், எழுந்து அங்கும் இங்கும் திரிவதும், உள்ளுக்குள்ளேயே ஏதேதோ முணுமுணுத்துக் கொள்ளுவதுமாயிருக்கிறான். "இதோ பார்!" என்று எழுந்து அலமாரிக் கதவைத் திறந்தான். ஒன்றும் தோன்றாமல் அப்படியே கொஞ்சநேரம் நின்றிருந்துவிட்டு மறுபடியும் வந்து படுத்துக் கொண்டான். தூக்கம் பிடிக்கவில்லை. தகப்பனார் பணங் கொடுக்காமல் போனதும், காதலியையும் தன்னையும் தினந்தோறும் சகிக்க முடியாத வகையில் வாய்க்கு வந்தபடி வைவதும்—ஆகிய காரியங்கள் எல்லாம் ராமகிருஷ்ணனுக்குப் பொறுக்கமுடியாத துன்பங்கள். இவற்றிற்கு விமோசனம் விளங்கவில்லை. வீட்டில், இந் நிலையில். வீண் பொழுது போக்கிக் கொண்டிருப்பதும் கஷ்டமாயிருக்கிறது. படிப்புக்குத்தான் அதிர்ஷ்டம் இல்லை; வீட்டில் இருந்து, ஒரு பிடி சோறு சந்தோஷமாய் உண்பதற்கும் கொடுமையாயிருக்கிறது. இந்தக் கஷ்டத்தில் மனைவியும் குழந்தையும்! "முன்னுக்குப்போனால் கடி, பின்னுக்குப் போனால் உதை" என்ற நிலைமை ஏற்பட்டு விட்டது. "இந்த ஈனப் பிழைப்புப் பிழைக்கா விட்டால் என்ன? மானம் போவதைக் காட்டிலும் உயிர் போவதே மேல்" என்று முடிவு செய்துகொண்டு எழுந்து அலமாரிக்குப் பக்கத்தில் போய், கதவைத்திறந்து, அதிலிருந்த ஒரு சீசாவைத் எடுத்தான். அதை எடுக்கும் போதே கை நடுக்கம் கண்டது. உடம்பில் மின்சாரம் ஊடுருவிப் பாய்ந்தது போல் ஆயிற்று. காதலியைச் சமீபித்துத் தனக்குள்ளேயே "ஐயோ! எனக்கு ஏனோ இந்தப் பைத்தியம் பிடித்து விட்டதே! என்னை எல்லாவகையிலும் மகிழ்வித்து, எப்பொழுதும் என்னையே தெய்வமாக மதித்துக்கொண்டிருக்கிற இந்தக் கட்டழகி—என் அருமைக்காதலி—ஐயோ! விதவை ஆவதா? சீச்சீ! என்ன மோசமான நீச எண்ணம்! எத்தனை ஆசைகள்! டாக்டர் பரீக்ஷை பூர்த்தியானவுடன் பெரிய உத்தியோகத்துக்குப் போய் மிகுந்த இன்பமயமான—சுக வாழ்க்கை நடத்தலாம் என்று வாயில் நீர் ஊறப் பேசிக்கொண்டோமே! இந்த நீசவேலை ஏன் செய்து கொள்ள வேணும்?..........வேண்டாம்! வேண்டாம்! என்றால் இந்தக் கஷ்டங்களைப் பொறுக்க முடியாது. சாவதே மேல்" என்று சீசாவை எடுத்து வாயில் வைக்கப் போகும்போது மகனைத் திரும்பிப் பார்த்தான்; சீசாவைக் கீழே இறக்கி, "ஐயோ என் அப்பனே! என் அருமைக்கண்ணே! நீ என்ன பாவம் செய்து கொண்டாயடா! இந்த—அற்பன்-பாவி—கஷ்ட ஜீவி-தற்கொலையாளனுடைய வயிற்றில் பிறப்பதற்கு" என்று முத்தங் கொடுத்து விட்டு "என் அன்பே! நீ என்னென்ன கஷ்டங்கள் அநுபவிக்க இருக்கிறாயோடா! நான்கு மாதப் பச்சைமண்ணை அநாதையாகச் செய்து விட்டுப்

---

"பத்துக் கேள்விப் பேச்சுக்களைவிட ஒரு நேரில் கண்ட சாக்ஷி விசேஷம்"

போவேன் என்று நினைக்கவில்லையே என் அப்பா! நல்ல அதிர்ஷ்டசாலி என்றும், பூமியை ஆளுவை என்றும் சோதிடர்கள் சொன்னார்களே! இது தானா உன் அதிர்ஷ்டம்! சுகம்! அவை யெல்லாம் என்ன ஆயின? என் வேலை தீர்ந்தது! எனக்கும் உனக்கும் உள்ள தொந்தம் தீர்ந்தது! செடி வைத்தவன் தண்ணீர் ஊற்றமாட்டானா'' என்று சொல்லிவிட்டு மனைவியைப் பார்த்து, கடைசிமுத்தம் ஒன்று வைத்துக்கொள்ளுகிறேன்'' என்று குனிந்து ஒரு முத்தம் வைத்துக்கொண்டான். ''எல்லாம் முடிந்தது! ருணம் தீர்ந்தது! உனக்கும், எனக்கும் இந்தப் பிரபஞ்ச வாழ்வுக்கும் உள்ள பற்று இதோடு சரி! உனக்குப் பெரிய அநியாயம் செய்துவிட்டுப் போகிறேன். இது என் குற்றம் இல்லை. எங்களுக்குப் பெரிய ஆஸ்தி இருக்கிறது என்று நினைத்து மோசம்போய் உன்னை எனக்குக் கலியாணஞ் செய்த உன் அப்பாவுடையதே குற்றம். படிப்பும் அறிவும் முற்றுப் பெறுவதற்கு முன்பு—என் கால்களின் ஆதரவில் நான் நிற்பதற்கு முன்பு—எனக்குக் கலியாணம் செய்து எல்லாக் கஷ்டங்களையும் வரவழைத்துக் கொடுத்த உன் அப்பாவுடையதே குற்றம். இந் நிலையில் யாரை நோவதிலும் பயன் இல்லை? நான் போகிறேன். எத்தனை ஜென்மம் எடுத்தாலும் பிராணத்தியாகம் செய்துகொண்ட பாவம் போகாது என்கிறார்களே, என்கதி என்ன? என்னாலே எத்தனைபேருக்கு எவ்வளவு பழிகள்! கஷ்டங்கள்! இருந்தாலும் என்ன செய்வேன்? முற்ற நனைந்தால் ஈரமில்லை. நான் வாழமாட்டேன். உரலில் தலையை நுழைத்துக் கொண்டு உலக்கைப் பூசைக்குப் பயந்து தீருமா?'' என்று சீசாவில் இருந்த விஷ திராவகத்தைப் பாதிக்கு மேல் குடித்து விட்டான்.

கமலத்துக்குத் தூக்கத்தில் குழப்பம் உண்டாயிற்று. முடியாது! முடியாது!! என்னால் முடியாது!!! நான் காதலனை விடமாட்டேன்'' என்று தூக்கத்தில் கூச்சல் போட்டாள். ராமகிருஷ்ணன் துள்ளி விழுந்து மனைவி



யைப் பார்த்துத் தனக்குள் ''என் குட்டு வெளிப்பட்டு விட்டதா'' என்று அங்கேயே பார்த்துக் கொண்டிருந்தான். கமலம் எழுந்து ''ஐயோ! ஐயோ!!

---

''செய்க அல்லது மடிக''

நானும் உங்கள் கூடவே வந்து விடுகிறேன்'' என்று பக்கத்தில் இருந்த காதலனைக் கட்டித் தழுவிக் கொண்டாள். ராமகிருஷ்ணன் அசையவில்லை. பேசவில்லை. கொஞ்சநேரம் கூர்மையாகக் காதலனைப் பார்த்தாள். அவனுடைய உடம்பு முழுவதிலும் வியர்வை கொட்டிக்கொண்டிருந்தது. கண்ணிமைகள் மெல்ல மெல்ல வீழ்ச்சி அடைந்துகொண்டிருந்தன. முகம் இருள் அடைந்து கொண்டிருந்தது. ''ஐயோ! இதென்ன அநியாயம்? பேச மாட்டீர்களா?'' என்று சொல்லிக்கொண்டே காதலன் கையில் பிடித்துக் கொண்டிருந்த சீசாவைப் பார்த்தாள்—நெஞ்சம் திடுக்கிட்டாள்! ''ஐயோ! ஈசுவரா! ராமச் சந்திரா! வீடு குட்டிச்சுவர் ஆய்விட்டதே! விஷம்! விஷம்!! நான் நினைத்தபடியே முடிந்து விட்டதே— இனி நானும் உயிர் வைத்திருக்க மாட்டேன் என்று காதலன் கையில் இருந்த சீசாவைப் பிடுங்கிக் கொண்டாள். அதை வெறிகொண்ட பார்வையோடு நோக்கினாள். மகனைப்பார்த்துக் கண்ணீர் வடித்தாள். பிறகு காதலனைப் பார்த்தபடியே சீசாவை வாயில் வைத்தாள்.

ராமகிருஷ்ணனுடைய கண்களிலிருந்து நீர்வடிந்தது. கமலம் மகனைப் பார்த்து ''ஐயோ என் அருமைக் கண்ணனா! என் செல்வத்துரையே!'' என்று முத்தமிட்டுக் கொண்டாள். பிறகு ஸ்மரணை யற்றுக்கிடந்த காதலனைப்பார்த்து ''ஐயோ! ஐயோ!'' என்று மேலேவிழுந்து ''உடம்புகுளிர்ந்து விட்டதே ஈசுவரா'' என்று பெரிய கூச்சல்போட்டு அழுதாள். இந்த அழுகுரலைக்கேட்டு மாமனார் பஞ்சாபகேச ஐயர் வேகமாய் ஓடிவந்தார். கமலம் மாமனாரைக் கண்டு நமஸ்கரித்து, கண்ணீர் வடித்து, உடல் நடுக்கத்துடன், ஈனசுரத்தில் கூறுகிறாள். வாழ்வு.......முடிந்தது......... கல்வி......கேள்விகள்............பூர்த்தியாகும்.........முன்பே......சுயசக்தி .........இல்லாதவர்களுக்கு.........கலியாணம்...........செய்து............ வைத்து.........சகல.........விதத்திலும்.........சகிக்க.........முடியாத.... கஷ்டங்களை.........உண்டாக்கி.....கடைசியில்.........எங்களுக்கு......... இந்த.........மாதிரி.........கதியைக்.........கொடுத்து விட்டீர்கள். இனி... பேசி......பயன்......என்ன? (பையனைப்பார்த்து) இதோ......உங்கள்...... பேரோடு......இருக்கிறான்.......உங்களிடம்......ஒப்படைத்து விட்டோம் .........உங்கள்.........இஷ்டம்......போகிறோம்.

> நல்லகாரியத்துக்கு நாலாயிரம் தடை. எதற்கும் ஊக்கமும் உறுதியும் துணிவும் வேண்டும். கஷ்டத்தின் பின்னை சுகம். நீ யோசனை செய்துகொண்டே இருந்தால் எந்தக் காரியமும் உனக்கு மலையாகத்தான் தோன்றும். கண்ணை மூடிக்கொண்டு காரியத்தில் இறங்கிவிடு. நீந்தல் பழகவேண்டியவன் மேட்டில் நின்றுகொண்டு விழித்துக்கொண்டிருப்பதில் லாபம் என்ன?

# மணிவாசகர் மதுரவாசகம்.

(K. மழவராயன்.)

வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
நான் கலந்து பாடுங்கா லற்கருப்பஞ் சாற்றினிலே
தேன் கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவைகலந்தென்
உன்கலந்து வுயிர் கலந்து வுவட்டாமலினிப் பதுவே

(இராமலிங்க சுவாமிகள்)

மணிவாசகப் பெருமான் மலர்வாய்ப் பிறந்த மணிவாசகங்களிரண்டி னுள்ளும் திருவாசகமே மிகச் சிறந்து விளங்குவதாகும். இது திராவிட வேத மெனக் கூறப்படும் பன்னிரு திரு முறைகளில் எட்டாந் திருமுறையாய் 51 பதிகவடிவமான 658 பாடல்களையுடையது. மற்றும் சிவ புராணத்தி லாரம்பித்து அச்சோப்பதிகத்தோடு முடிவடைகிறது. இதன் சிறப்பைச் சிறிது சிந்திப்பாம்.

## நூலின் பயன்

இந்நூலின் பயனாவது தன்னைக் கற்பாரது பிறவித்துன்பங்களை யெல் லாம் வேரோடு ஒழித்து அவர்கட்கு முத்திப்பேரானந்தத்தை யளித்தலாம். இதனை,

'தொல்லை யிரும்பிறவி சூழுந் தளைநீக்கி
அல்லலறுத்து ஆனந்தமாக்கியதே- எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூரெங்கோன்
திருவாசகமென்னுந் தேன்.'

என்ற சிறப்புப் பாயிரத்தாலும்,

' வாட்டமிலா மாணிக்க வாசக நின் வாசகத்தைக்
கேட்ட பொழுதங்கிருந்த கீழ்ப்பறவைச் சாதிகளும்
வேட்டமுறும் பொல்லா விலங்குகளு மெஞ்ஞான
நாட்ட முறு மென்னிலங்கு நானடைதல் வியப்பன்றே.'

என்ற திருவருட்பாத் திருப்பாடலும் நன்கு தெளிவாம்.

## நூலின் பெருமை

ஒருவாசகத்துக்கு முருகாதார்
திருவாசகத்துள் ளுருகாரே-

என்ற திருப் பெருந்துறைப் புராணத்தாலும்,

---

"ஒரு நண்பனை இழந்துவிடச் செய்யும் துன்பச் செயல்— அவ னுக்குக் கடன் கொடுப்பது"

'மனங்கரைத்து மலங்கெடுக்கும்
வாசகத்தின் மாண்டோர்கள்
கனஞ்சடை யென்றுரு வேற்றிக்
கண்மூடிக் கதறுவரோ'

என்று மனோன்மணீயம் ஆசிரியர் (ராவ்பஹதூர் பி. சுந்தரம்பிள்ளை, எம். ஏ.) அவர்கள் அறைவதினாலும் இந்நூலின் பெருமையை நன்கு அறியலாம். எத் தன்மையான கல் நெஞ்சையும் கசிந்துருகச்செய்து பக்தியுண்டாக்க வல்லது திருவாசகமென்பது மேற்கூறியவற்றால் நனிவிளங்கும். இதே கருத்தைத் திருவருட்டன்மையும் பைந்தமிழ்ப் புலமையும் நிரம்பிய துறை மங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள்,

திருவாசகமிங் கொருகாலோதிற்
கருங்கன் மனமுங் கரைந்துருகக் கண்கள்
தொடு மணற்கேணியிற் சுரந்து நீர்பாய
மெய்ம் மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி
அன்பராகுந ரன்றி
மன்பதை யுலகின் மற்றைய ரிலரே.

என்று அருளிப் போந்தனார். இன்னும் அருந்தமிழ் அன்னையாகிய அவ்வைப் பிராட்டியார்,

தேவர் குறளுந் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
திருவாசகமும் திருமூலர் சொல்லும்
ஒருவாசகமென் றுணர்.

என்று பாடியதினாலும் இந்நூலின் மாண்பு இனிது புலனாம்.

## நூலின் மறுபெயர்கள்

நான்மறைகளிலும் நவிலப்பட்டுள்ள சைவ சித்தாந்தமே இந்நூலில் பதிப்பிக்கப்பட்டதென்ற கருத்தால் இஃது மூவர் தேவாரங்களைப்போல் தமிழ் மறையெனத் தமிழர்களால் கருதப் படுகின்றது. மற்றும் "வடிவுடை மழுவேந்தி மதகரியுரிபோர்த்து புரிகுழலுமையொடும்" மழவிடை மீதமர்ந்த மன்றாடிதானே திருவருள் கொண்டு திருவாத வூரர் திருவுள்ளத்தில் நிலைத்துத் திருவாசகத் திருப்பாடல்களை ஆக்கியதினால் திருவருட்பா எனவும் வழங்கும்.

## மாணிக்க வாசகர் மாண்பு

மாணிக்க வாசக சுவாமிகள் பிறப்பிலே செந்தண்மை பூண்டொழுகும் அந்தணர் குலத்துதித்தவராயினும் கல்விக்கடலைக் கரைகடந்தவராதலால் தென்னவனால் மிகவும் போற்றப்பட்டு முதன் மந்திரியாகிப் 'பிரமராயர்' என்னும் பட்டத்தைப் பெற்றனர். அமைச்சத்தொழில் பூண்டொழுகுங்கால் ஓர் இராஜ தந்திரி (Politician) யாக விளங்கினார். பின்னர் திருப்பெருந்துறை சென்று குருவருள் பெற்றபின்பு ஓர் பக்திமானாக விளங்கினார். அதோடு ஓர் மாப் பெருங்கவியாகவும் விளங்கினார். மற்றும் ஓர்

தத்துவ சாஸ்திரி (Philosopher) யாகவு மிலங்கினர். ஆகவே மேற் கூறியவற்றால் அவர் சாமானிய புலவரைப் போல்வாரல்லர் என்பது வெள்ளிடை மலையென விளங்குகின்றது.

மற்றும் திருவாசகத்தில் பாஷாபிமான மிகுந்த அடிகளும், தேசாபிமானஞ் செறிந்தவர்களும் மிகவும் காணப்படுகின்றது. அமிழ்தினு மினிய தமிழ் மொழியின் மாண்பை அடிக்கடி விளக்குவதால் மணிவாசகருக்குத் தம் தாய் மொழியாகிய தமிழ் மொழியினிடத்து அளவிறந்த அன்புண்டென்பது இனிது புலனாகிறது.

......................." காதலவர்க்
கன்பாண்டு மீளா அருள் புரிவா னாடென்றுந்
தென்பாண்டி நாடே தெளி.

என்பன முதலான அடிகள் மணிவாசகத்தில் மிளிர்வதால் ஆசிரியரது நாட்டுப்பற்று (Patriotism) நன்கு புலனாகிறது.

இனி வடலூர்—இராமலிங்க சுவாமிகள்,

பெண்சுமந்த பாகப் பெருமா னொருமாமேல்
என்சுமந்த சேவகன்போ லெய்தியதும் வைகைநதி
மண்சுமந்து நின்றது மோர் மாறன் பிரம்படியாற்
புண்சுமந்து கொண்டது நின் பொருட்டன்றோ புண்ணியனே.

என்று மாணிக்கவாசக சுவாமிகளது பக்தியின் மாட்சியைப் போற்றித் துதிப்பதால் அவரது அருளின் தன்மையும், தம்மரும் பனுவலின் பெருமையும் இனிது புலனாகிறது. இக்கட்டுரையிற் பிழையுளதேல் அன்பர் அதனைப் பொறுக்க. சுபம்.

"என் விதிக்கு நானே எஜமான்" 'என் உயிருக்கு நானே தலைவன்' என்னும் வாக்கியங்களை ஞாபகத்தில் வைத்துக்கொள். "நான் தாழ்ந்தவன்" என்ற உணர்ச்சியைக் கொன்றுவிடு; உடனே உனது சக்தி இன்னது என்று விளங்கிவிடும். கஷ்டப்பட்டு வேலைசெய். உயர்ந்தவனாக—மதிப்புள்ளவனாக ஒளிர்வாய். உன்னைக்காட்டிலும் தாழ்ந்தவர்களிற் சிலர் நண்பர்களிடத்திலும், சமூகத்திலும், செல்வாக்கும் மதிப்பும் பெற்று வாழ்கிறார்கள். நீ எவ்வளவோ அழகாயிருக்கிறாய், படித்திருக்கிறாய் ஆனால் "நான் தாழ்ந்தவன்" என்ற உணர்ச்சி உனக்குள் அடங்கிக் கிடப்பதினாலேயே நீ உபயோகம் இல்லாதவனாகி விடுகிறாய். பைத்தியக்காரனைத் தவிர மற்றவர்கள் யாவரும் தங்களுக்குள்ள மனோசக்தியைக் கொண்டு முன்னேறி மாட்சிபெறக்கூடும் என்பது உளநூற் புலவர் துணிவு.

# சுகாதாரம்



## ஆரோக்கியப் பழக்க வழக்கங்கள்.

சுகாதார இருப்பிடங்களில் தங்கும் விதிகளைக் கவனித்தல்.

தொத்து வியாதி சம்பந்தப் பட்டவர்களை விட்டு விலகி இருத்தல்.

ஜலதோஷம் வர வொட்டாமல் தடுத்துக் கொள்ளுதல்.

வியாதியிலிருந்து தேறி வரும் போது வெகு ஜாக்கிரதையாய் தேகத்தைப் பாது காத்தல்.

சர்ம வியாதிகள், தொத்து வியாதிகள் இவைகளை வர வொட்டாமல் தடுத்துக் கொள்ளுதல்.

பள்ளிக்கூடத்தைச் சேர்ந்த விளையாடு மிடம், வீடு, முற்றம், தெருக்கள், சந்துக்கள், பார்க்குகள், மூகாம்போடும் இடங்கள் இவைகளைச் சுத்தமாய் வைத்துக் கொள்ளுதல்.

சமையலறை, ஸ்நான அறை, படுக்கை அறை இவற்றைச் சுகாதார நிலைமையில் வைத்திருத்தல்.

வீட்டுக்குப்பை, செத்தை இவைகளைச் சரியான பாண்டங்களில் திரட்டிப் போடுதல்.

கொசுக்கள் மூட்டைப் பூச்சிகள் வளரவொட்டாமல் தடுத்தல்.

### கெடுதலான வஸ்துக்கள்

தேகம் வளர்ந்து வரும்போது தேயிலை, காப்பி முதலிய பானங்களைக் குடியாதிருத்தல்.

சாராயம், கள் முதலிய போதை வஸ்துக்களைக் குடியாதிருத்தல்.

எந்தவிதமான புகையிலையையும் உபயோகிக்காதிருத்தல்.

டாக்டர் அனுமதியின்மேல் மருந்தைச் சாப்பிடுதல். வீட்டு மருந்துகளுக்கு இது அவசியமில்லை.

படுக்கைக்குப் போகும் காலத்தை ஒழுங்குப் படுத்தல்

வெளிக் காற்றிலாவது, ஜன்னல்களைத் திறந்துவைத்தாவது படுத் துறங்குதல்.

அறையில் விளக்கு வைக்காமல் படுத்துறங்குதல்.

படுக்கும்போதாவது, ஓய்வடையும் போதாவது தேகத்தை நீட்டிக் கொண்டிருத்தல்.

தாழ்ந்த தலையணையை உபயோகித்தல்; அல்லது தலையணை யில்லாதிருத்தல்.

போதுமானதும், லேசானதும் வெப்பமுள்ளதுமான போர்வையை உபயோகித்தல்.

பள்ளிக்கூடத்திலாவது, வீட்டிலாவது ஓய்வு இருக்கும்போது படுத்துக் கொள்ளல்.

பகலில் போதுமான ஓய்வடைய ஏற்பாடு செய்தல்.

கூடுமானால் சாப்பிட்டான வுடன் ஓய்வு எடுத்துக் கொள்ளல்.

தூங்கு முன் லேசான ஆகாரம் சாப்பிடுதல்.

---

"உண்பதற்காக வாழாதே—வாழ்வதற்காக உண்."

தூங்கப் போகுமுன் மனதிற்கு அதிக வேலையாவது கிளர்ச்சியாவது கொடாமலிருத்தல் (சாயங்கால வேளையில் நிம்மதியாயிருத்தல்.)

பிரதி தினம் காலையில் படுக்கைத் துணியைக் காற்றாடவிடல்.

வாரத்தில் ஒரு இரவு இஷ்டர்கள் கூட்டத்தில் போயிருத்தல்.

தன் சொந்த படுக்கையில் படுத்துறங்குதல், கூடுமானால் தன் சொந்த அறையிலேயே படுத்துறங்குதல்.

சௌகரியத்திற்கும், வேலைக்கும் ஒத்தாற்போல், ஆடையைத் தகுந்தபடி வைத்துக்கொள்ளுதல். (இறுக்கக்கட்டும் கட்டுகள் அல்லது நெகிழ்ச்சியுள்ள வஸ்துக்கள் கூடா.

உடையை கூடுமானவரையில் சுத்தமாக வைத்துக் கொள்ளுதல்.

ஆடையை நனைய வொட்டாமல் பார்த்துக் கொள்ளுதல். ஈரமான உடையை கூடிய சீக்கிரத்தில் அவிழ்த்துப் போடுதல்; குளிர் எடுத்தால் வெப்பமாக்கிக் கொள்ளல்.

உஷ்ணக்கிரம் சீதோஷ்ணம் இவற்றிற்குத் தகுந்தபடி உடுக்கும் உடையைச் சரிபடுத்திக் கொள்ளல்.

சீதோஷ்ணம், ருது இவற்றிற்குத் தகுந்தபடி உள் ஆடையைத் தரித்தல்.

அதிகப்படியான கழுத்துப் பட்டை, கம்பளம் முதலியவற்றைத் தவிர்த்தல்.

வியாயாமம் எடுத்துக்கொண்டபிறகு, வெப்பமாயிருந்தால் அதிகப்படி போர்வை போர்த்துக் கொள்ளுதல்.

கால் பெரு விரல் நகங்களை வளரவொட்டாமல் தடுத்து மேலே சீவி, சரியான பாதரட்சை போட்டுக் கொள்ளுதல்.

சூரியனையாவது, பிரகாசமான வெளிச்சத்தையாவது நேராகப் பார்க்காமல் இருத்தல் (வேண்டும் போது கண்ணாடி போட்டுக் கொள்ள வேண்டியது).

வெளிச்சத்தைப் பார்க்க வேண்டுமானால் இருட்டைக் கொடுக்கும் கண்ணாடி போட்டுக் கொள்ள வேண்டியது.

நுட்பமான வேலையைத் தவிர்த்தல்.

அடிக்கடி கண்களுக்கு ஓய்வு கொடுத்து, களைத்திருக்கும் போது அதை மூடியாவது, அல்லது தூரத்திலுள்ள வஸ்துக்களையாவது பார்த்தல்.

படுத்துக் கொண்டே வாசியாதிருத்தல்.

போய்க் கொண்டிருக்கும் வண்டிகளில் வாசியாதிருத்தல்.

கண்களில் ஏதாகிலும் கெடுதல் இருந்தால் டாக்டரைக் கேட்டு நடத்தல்.

கண்களில் புண் இருந்தாலும், கண்கள் ஓய்ந்து கிடந்தாலும், அவைகளைக் கழுவிச் சுத்தம் செய்தல்.

காதுகளை ஜாக்கிரதையாய்க் கழுவுதல்.

காதுகளில் ஒன்றையும் போகவொட்டாமல் தடுத்தல்.

காதுகளில் சப்தம் செய்யாமலும் மற்றவர்களுடைய காதுகளை இழுக்காமலுமிருத்தல்.

மூக்கில் பலமாய் ஊதி காதுகளுக்குக் கெடுதல் உண்டாகாமல் செய்தல்.

காதுகளுக்குக் கெடுதல் உண்டானால் டாக்டரைக் கொண்டு பார்த்தல்.

நீந்தும் போது காதுகளைப் பாதுகாத்தல்.

(" ஆரோக்கிய தீபிகை ")

---

"நம்முடைய தேவைகளை இயற்கை அளிக்கிறது"




## "உம்ம வீட்டு இழவில்லே"

ஒரு ஊரில் ஒரு ஏழைப் பிராமணனுடைய மகன் திடீரென்று இறந்து போனான். பிணந் தூக்கிகள் வந்து நான்கு வராகன் வேணும், ஐந்து வராகன் வேணும் என்று பேரம் பேசிப் பிடிவாதம் செய்தார்கள். பாவம் அந்தப் பிராமணன் தன்னுடைய வறுமை நிலைமையை அவர்களுக்குத் தெரிவித்து வேண்டிக் கொண்டான். அதற்கு அவர்கள்:

"இந்தத் தடவை நீ இந்தப் பிரகாரமே கொடுத்துவிடு, இன்னொரு தடவை வேணுமானால் கொஞ்சம் சகாயமாகவே செய்கிறோம்" என்றார்கள்.






அப்போது பக்கத்து வீட்டுப் பிராமணர் ஒருவர் வந்து, மத்தியஸ்தம் செய்யும் எண்ணத்தோடு பிணந் தூக்கிகளைப் பார்த்துச் சொல்லுகிறார்:

"என்னமோ பாவம்! ஏழை; நீங்கள் எல்லாரும் தயவு காட்ட வேணும்"

பிணந்தூக்கிகள் :-

"ஓய் பிராமணரே! உமக்கு என்னங் காணும்! இது உம்ம வீட்டு இழவு இல்லை அல்லவா? உம்முடைய வீட்டில் ஆனால் எங்களுக்குச் சந்தோஷமே! அப்போது சும்மாகூட வந்து கைகட்டிச் சேவகம் செய்வோம். இன்னொரு இடத்தில் கிடைக்கிற வரும்படியை நீர் ஏன் காணும் நடுவில் வந்து கெடுக்கிறீர்?"

***

## "சங்கீதம்"

ராமன்:—"நேற்றைய சங்கீதம் எப்படி இருந்தது?"

கண்ணன்:—அருமை! அருமை! எனக்குச் செவிடு என்பது உனக்குத் தெரியுமா?"

---

"சுறு சுறுப்பு என்றும் வலிமையைக் காக்கிறது"

## "எது நல்லது?"

சகுனங்களில் மிகவும் அழுத்தமான நம்பிக்கை கொண்ட ஒரு கவுண்டன், ஒரு ஊருக்குப் பிரயாணப்பட்டுப் போனான், அப்போது ஒரு நாய் குறுக்கே ஓடிற்று. அவனுக்குச் சந்தேகம் பிறந்து ஒரு பஞ்சாங்க ஐயரிடம் போய்க் கேட்கிறான்:



"நமஸ்காரம் ஸ்வாமீ! நாய் வலமிருந்து இடமாகப் போவது நல்லதா, இடமிருந்து வலமாகப் போவது நல்லதா?"

ஐயர்:—(அவனுடைய பேதைமையைக் கண்டு நகைத்து) மேலே தாவி விழுந்து—தொத்தி—கடியாமல் போவது நல்லது."

***

## "அருந்ததி நட்சத்திரம்"



கலியாணம் நடந்த பிறகு ஒரு குடியானவனுக்கு அருந்ததி நட்சத்திரம் காட்டப் புரோகிதன் அவனை வெளியில் அழைத்துக் கொண்டு வந்தான். அப்போது,

புரோகிதன்:—"இதோ பார் அருந்ததி நட்சத்திரம்! அதோ பார்—ஆ—அங்கே அல்ல இங்கே பார்"

என்று ஆகாயத்தில் பல இடங்களைச் சுட்டிக் காட்டினான்.

வெகு நேரமாகியும் அந்தக் குடியானவனுக்குக் கழுத்து வலியைத் தவிர நட்சத்திரம் தெரியாமல் போகவே கோபம் கிளம்பிக் கூறுகின்றான்:

"அருந்ததி நட்சத்திரம் தெரியாமல் போனாலும் அறுபது வராகன் கடன் பட்டது நன்றாகத் தெரிகிறது; சரி! சரி! உன் பாட்டைப் பார்த்துக்கொண்டு இந்தப் பக்கம் வா ஐயரே!"

---

"ஒரு மனிதனது தவறு மற்ற மனிதனுக்குப் படிப்பினை"

## "புத்திசாலி"

ஒருவன் ஒரு குளத்தங் கரையில் உட்கார்ந்து தூண்டில் போட்டுக் கொண்டிருந்தான். ஒரு மீனுங்கூட வரவில்லை. வெகு நேரம்வரை தூண்டிலை இழுத்துப் போட்டுப் போட்டு ஆத்திரத்தோடு முயற்சி செய்து பார்த்தான். பலிக்கவில்லை. கடைசியில் மனச் சங்கடத்தோடு தூண்டிலை விசுக்கென்று இழுத்தான். தூண்டில் முன் பின்னுக்கு வந்து சட்டையில் மாட்டிக்கொண்டது. அவனும் எங்கெங்கோ முதுகைத் தேய்த்து பிரம்ம பிரயத்தனம் செய்தான்—எடுக்க முடியவில்லை.



கடைசியில் இதை எடுத்துவிடும்படியான மகானுபாவனைக் கண்டுபிடிக்க வேணும் என்று புறப்பட்டான்—ஐந்தாறு மைல் நடந்தான். அங்கே ஒரு வழிப் போக்கனைச் சந்தித்துச் சொல்லுகிறான்:

"என்ன ஐயா! உங்களுக்கு வெகு புண்ணியம். இதைக் கொஞ்சம் எடுத்துவிட மாட்டீர்களா? நானும் ஒரு புண்ணியவானைக் கண்டுபிடிக்கலாம் என்று ஐந்தாறு மைல்களுக்கு மேல் நடந்துவிட்டேன். வெகு கஷ்டமாயிருக்கிறது. எடுக்க முடியவில்லை."

வழிப்போக்கன்:—"ஓ! அப்படியா? நான் வேணுமானால் எடுத்துவிடுகிறேன்! ஆனால் நீ ஏன் உன் சட்டையைக் கழற்றிவிடக் கூடாது?"

***

## "கூட்டம்"

வைத்தியன்:—"கூட்டம் இருக்கிற இடத்துக்குப் போகாதே"
ரோகி:—"போகாவிட்டால் என் பிழைப்பு நடக்காதே"
வைத்தியன்:—"உனக்கு என்ன வேலை?"
ரோகி:—"முடிச்சுமாறுதல்"

***

## "தொப்பி"

ராஜவேல்:—"உன் தொப்பி மறைக்கிறது. நான் மூன்று ரூபாய் கொடுத்து டிக்கெட் வாங்கியிருக்கிறேன். தொப்பியைக் கழற்றினாலொழிய எனக்கு நாடகம் தெரியாது."

நமாஸ்கான்:—"நான் இருபது ரூபாய் கொடுத்து நேற்றுத்தான் இந்தத் தொப்பியை வாங்கினேன், அதை எல்லாரும் பார்க்க வேண்டாமா?"

---

"எந்தச் சமயத்திலும் மந்தஹாஸத்தோடு விளங்குக."

## "இராவணன் தலை"

சோம்பேறியான மந்த புத்திச் "சாமியார்" ஒருவன், சுடுகாட்டு மண்டை ஒன்றைக் கையில் ஏந்திக் கொண்டு ஒரு கிராமத்துக்குப் போய்,

"இது இராவணனுடைய தலை மண்டைகளில் ஒன்று. ஒரு மஹான் எனக்குக் கொடுத்தது" என்று எல்லாருக்கும் காட்டிக் காசு வாங்கிக்கொண்டிருந்தான்.




ஜனங்கள் கும்பல் கும்பலாய் வந்து பார்த்துக் கொண்டும் போய்க் கொண்டும் இருந்தார்கள். அவர்களில் ஒரு கிழவனார் கேட்கிறார்:

"என்ன ஓய்! இராவணனுடைய தலை இவ்வளவு சிறியதாயிருக்கிறதே, என்? உன் வார்த்தையில் எனக்கு நம்பிக்கை இல்லை."

மந்த புத்தி:—"ஐயா! இது இராவணனுடைய குழந்தைப் பருவத்துத் தலை, அதனால் சிறிதாயிருக்கிறது"

அவனுடைய முட்டாள் தனத்துக்கு எல்லாரும் சிரித்தார்கள்.

***

திம்மண்ணன்:—"என் பெண்டாட்டி புதிய தினுசில் சமையல் செய்கிறாள்"

பொம்மண்ணன்:—"என் பெண்டாட்டியும் புதிய தினுசாகவே சமைத்து வருகிறாள்"

திம்மண்ணன்:—"ஆனால் அஜீர்ணத்துக்கு என்ன மருந்து சாப்பிடுகிறாய்?"

***

ரயில் வண்டி நகர்ந்து விட்டது. ஒரு கிழவனார் தஸ் புஸ் என்று பெருமூச்சு விட்டுக் கொண்டு ஓடி வந்தார். கார்டு அவருடைய கையைப் பிடித்துத் தூக்கி வண்டிக்குள் விட்டு விட்டார். பிறகு,

கார்டு—"நான் உங்களுக்கு எவ்வளவு உபகாரம் செய்தேன் என்று தெரிந்து கொண்டீர்களா? நான் எடுத்து விடாமல் இருந்திருந்தால் உங்களுக்கு வண்டி தவறியிருக்கும்; அதற்காக எனக்கு ஏதேனும் பிரதி உபகாரம் செய்யவேணும்."

கிழவனார்:—"நான் ரயில் ஏறுவதற்கு வரவில்லை. இந்தக்கடிதத்தை ரயிலில் தபால் பெட்டியில் போடவந்தேன். நீங்கள் இழுத்து விட்டீர்கள். இனி அடுத்த ஸ்டேஷனிலிருந்து ஊருக்குப் போகப் பணம் கையில் இல்லையே! ஐயோ! ராமா!"

# ஆனந்த சந்திரோதயம்

தமிழாசிரியர் S. V. வரதராஜையங்கார்.

## ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திரர்

வாழ்க்கைப் போராட்டத்தில் அகப்பட்ட மனிதனின் கலங்கிய மனம், அதன் வேகம் அடங்கிச் சற்று அமைதியோடு ஆனந்தானுபவத்திலே ஈடுபடும் படிக்கும் சன்மார்க்கத்திலே சற்று வழிதிரும்பித் தனது திருஷ்டியைச் செலுத்துவதற்கும் மிகுந்த உதவியாயிருப்பது ஆனந்தானுபவத்தை வெளியிடும் மகான்களின் சரித்திரமே யாகும். இத்தகைய மகான்கள் இறைவனது திருவருளால் நம் பாரதபூமியில் அவதரித்தும் அவதரித்துக் கொண்டும் இருக்கிறார்கள். ஸ்ரீராம.கிருஷ்ண பரமஹம்சர் என்ன, அவருடைய சிஷ்யரான விவேகானந்த சுவாமிகளென்ன, பாவ்ஹாரி பாபுவென்ன இவர்களைப்பற்றி நாம் சவிஸ்தாரமாக அறிந்து, ஞானக் கருவூலமான அவர்கள் சரிதங்களைப் படித்துப் பெரிதும் கொண்டாடுகிறோம். இது போலவே பாரத தேசத்தின் சரித்திராரம்ப காலத்திலிருந்து எத்தனையோ பல பெரியார்கள் நமது தேசத்தில் நிகழ்ந்திருந்தனர் என்றும் அறிகிறோம். அவர்களுள் சிலர் யோக மார்க்கத்தையும், சிலர் பக்தி மார்க்கத்தையும், சிலர் ஞான மார்க்கத்தையும் பின்பற்றிப் பிறவியின் பயனை எய்தினர். யோக மார்க்கத்தை மேற்கொண்டு மகா ஞானியாக விருந்த உத்தமர்களில் ஸ்ரீசதாசிவ பிரம்மேந்திர சுவாமிகளும் முக்கியராவார். இவர் தென்னாட்டில் நிகழ்ந்தவர். அவருடைய திருநாமம் மிகப் பிரசித்தமானது. விசேஷமாக அத்வைதிகள் இவரைத் தெய்வமாகக் கொண்டாடுகிறார்கள்.

இம்மகான் சோழவள நாட்டில் காவிரி நதி தீரத்திலுள்ள திருவிசைநல்லூர் என்னும் கிராமத்தில் சுமார் 200 ஆண்டுகளுக்கு முன்னர் இருந்தவர். இவர் பிறந்து வளர்ந்து கல்வி பயின்ற ஊரும் அதுவே. திருவிசை நல்லூர் எத்தனையோ பெரியார்களுக்கு அவதார ஸ்தலமா யிருந்தது. பிரம்மேந்திரர் காலத்தில் 'ஜானகி பரிணயம்' என்னும் சம்ஸ்கிருத நாடகத்தை இயற்றியவரான ஸ்ரீராமபத்திர தீக்ஷிதர் என்ற பிரபல வித்வான் ஒருவர் அவ்வூரிலிருந்தார். இவரிடம் ஆர்யா சதகம், தயா சதகம் என்னும் சிறந்த பக்தி கிரந்தங்களை இயற்றியவரான ஸ்ரீ வேங்கடேச ஐயா அவர்களும், மகா பாஷ்ய கோபாலகிருஷ்ண சாஸ்திரிகளும், நமது சதாசிவரும் ஒரு சாலை மாணாக்கர்களாகக் கல்விகற்று வந்தார்கள். மேற்கூறிய கோபாலகிருஷ்ண சாஸ்திரிகள் புதுக்கோட்டை சமஸ்தானம் தொண்டைமானுக்கு உபதேச குருவாகிச் சன்

மானிக்கப் பெற்று, மான்யம் பெற்றவர். அந்த மான்யத்தைப் பற்றிக் கூறும் செப்புப்பட்டயம் ஒன்று கி. பி. 1738-ம் ஆண்டில் ஏற்பட்டிருப்பதால், அதைக்கொண்டு சதாசிவரின் காலம் இன்னதென்று நிர்ணயிக்கப் படுகிறது.

இம் மூவரும் பிற்காலத்தில் மகாபிரசித்தர்களாய்த் தங்கள் வாழ்க்கையைச் சன்மார்க்கத்தில் கழித்து வந்தனர். இவர்களுள், நம் மகானின், வாழ்வு ஆழ்ந்த ஏகாந்த யோகானுபவத்திலும் பூரண விரக்தி மார்க்கத்திலும் திரும்பிற்று. கல்வி பயிலும்போது சதாசிவர் குருவினிடம் பலமாகத் தர்க்கித்துத் தமது சங்கைகள் நீங்கும்வரை வாதாடி உண்மையை அறிவதில் மிக்க சிரத்தையுடனிருந்தார். நாளடைவில் நல்ல பாண்டித்யமும் அடைந்தார். அவருடைய வாழ்க்கையான கால்வாய் மகாநதியை யடையும் பரிபக்குவ காலம் சமீபித்தது. ஒருநாள் அவர் தம் குருவிடம் பாடம் கேட்டு விட்டு வீட்டுக்குத் திரும்பினார். அப்பொழுது அவருக்கு விவாகமாகிக் கொஞ்ச காலமாயிற்று. வீட்டிற்குச் சென்றதும் ஏதோ விசேஷ அறிகுறிகள் காணப்பட்டன. விசேஷ ஏற்பாடுகள் நடந்துகொண் டிருந்தன. தன் தாயாரை நோக்கி "என்ன விசேஷ"மென்று வினவினார். அத்தாய் "அப்பா! உனது மனைவி ருதுவாகி இருக்கின்றாள்; இன்று விருந்து செய்ய வேண்டும்; ஊரழைக்க வேண்டும்" என்று கூறினள். சதாசிவருக்கோ அப்பொழுது நல்ல பசியாக விருந்தது. சாப்பாட்டிற்குச் சற்று நேரம் பிடிக்கும்போலிருந்தது. சற்று நேரம் தனியே ஓரிடத்தில் உட்கார்ந்து யோசித்தார். "குடும்ப வாழ்க்கை சரிவர ஆரம்பிக்கு முன்பே பசிப்பிணியால் வாதனைப்பட நேருகிறது. இனி ரசமற்ற இவ்வாழ்வில் இறங்கினால் எவ்விதத் துன்பங்கள் வருமோ! சமுசார சாகரத்தில் அழுந்தியவன் ஈஸ்வரனை வழிபட்டுக் கடைத்தேறுவது மிகவும் அருமையே! ஆகையால் இப்பொழுதே இதனின்றும் விடுபடுவது தான் மேலாகும்" என்று கருதினார். வடமொழியில் "சற்குரு சதாசார சிஷ்யனைத் தேடியலைகின்றான்; உண்மைச் சீடன் சற்குருவை நாடிச் சுற்றுகிறான்" என்று ஒரு பழமொழியுண்டு. அதன்படி இத்தருணத்தில் சதாசிவருக்குத் தக்க குரு ஒருவர் கிடைத்தார். அவருடைய திருவடிகளைத் திடசித்தத்துடன் பற்றிக் கொண்டு அவரிடம் யோக சாஸ்திரத்தில் பயிற்சி யடைந்தார். இக்காலத்தில் இவர் சில பக்திரஸக் கீர்த்தனைகளையும், நூல்களையும் இயற்றியருளினார். அவர் அருளிய கீர்த்தனைகள் இன்னும் பஜனை கோஷ்டிகளில் பாடப்படுகின்றன. அவை மிக்க உன்னதமான கருத்துடையவை; சதாசிவரின் உயர்ந்த மனோ நிலையையும் அவருக்கு இசையில் இருந்த பயிற்சியையும் நன்கு வெளியிடுபவை. அக் கீர்த்தனங்கள் "சிந்தா நாஸ்திகில தோஷம் சிந்தா நாஸ்திகில" என்றும், "தத்வத் ஜீவத்வம் பிரம்மணி தத்வத் ஜீவத்வம்" என்றும் தொடங்குவன. இவர் இயற்றியுள்ள நூல்கள் "சிவமானஸிக பூஜை" "ஆத்ம வித்யா விலாசம்" "சிவயோக தீபிகை" என்பன,

இவற்றுள் முதலது சிவபூஜையின் மகிமையைப்பற்றியும் பக்தி ஞானத்தைப் பற்றிப் பொதுவாகவும் மிகவும் அழகாகவும் கூறுகின்றது. அதில்,

"பகவானே! பிரபஞ்சத்தை இருப்பிடமாகக் கொண்ட உமக்கு யான் எந்த இருப்பிடத்தை அளிக்க வல்லேன்? சுயம்பிரகாச மூர்த்தியே! உமக்கு நான் எடுக்கிற தீபம் எவ்வாறு ஒளியுள்ளதாகும்?" என்பன போன்ற சில உயர்ந்த ஸ்தோத்திரங்கள் காணப்படுகின்றன. "ஆத்ம வித்யா விலாசம்" 64-ஆர்யா சுலோகங்கள் கொண்டது; தன்னைத் தானே யறிந்த யோகியின் மகிமையை விஸ்தரிப்பது; இந்த கிரந்தத்திலிருந்து இவருடைய குரு பரம சிவேந்திரர் என்பது புலப்படுகிறது.

மூன்றாவதான "சிவயோக தீபிகை" என்னும் கிரந்தம் ஐந்து அத்தியாயங்கள் கொண்டது; யோகத்தின் பலவித மார்க்கங்களும் இதில் உரைக்கப்படுகின்றன. இது இவரியற்றிய தல்லவென்று சிலர் அபிப்பிராயப் படுகிறார்கள்.

இவர் ஒருநாள் தமது குருவுடன் ஆத்மவிசாரம் செய்துகொண் டிருந்த பொழுது, தமது கொள்கையை ஸ்தாபிக்க மிகப் பலமாக வாதித்து உரக்கப் பேசிக்கொண் டிருந்தார். அப்பொழுது அவர் குரு பொறுக்க முடியாமல் "அப்பா! சதாசிவா! என்று உன்வாய் அடைத்து நீ பேசாமலிருக்கக் கற்றுக்கொள்ளப் போகிறாய்" என்றார். உடனே பிரம்மேந்திரர் தனது குற்றத்தை யுணர்ந்து அன்று முதல் மௌனத்தை ஜன்ம விரதமாகக் கொண்டார். "மோன மென்பது ஞான வரம்பு" அல்லவா? தாயுமானவரும் "கண்மூடி மௌனியாகித் தனியே இருப்பதற்கு எண்ணினேன் எண்ணம்" என்றருள வில்லையா? தாம் செய்த பிழைக்கு மன்னிப்புக் கேட்டுக்கொண்டு அவர் வெளியேறினார். அன்று முதல் எங்கும் அதிகம் தங்காமலும் எவரோடும் வாய்திறந்து பேசாமலும் மறைந்தும் தனியே சஞ்சரிக்க வாரம்தார். இன்றியமையாதபோது கைசாடை காட்டுவார். சில வேளை பூமியில் எழுதிக் காட்டுவார். தன்னிட மிருந்த கோபகுணத்தை அவர் சிறிது சிறிதாக உறுதியாகப் போக்கி வந்தார்.

இங்ஙனம் சஞ்சாரம் செய்துகொண் டிருந்தநாளில் ஒரு சமயம் அவர் ஓர் வயலின் வரப்பில் தலையை வைத்துக்கொண்டு படுத்திருந்தார். அவ்வழியாக வந்த சிலர் "உலகப்பற்றை விட்ட இவருக்குத் தலையணைகூட வேண்டுமா?" என்று பரிகாசமாகப் பேசினார்கள். உடனே அவர் வரப்பின் மேல் வைத்திருந்த தலையை எடுத்துக் கீழே வைத்துக்கொண்டார். அப்பால், சதாசிவர் அவ்வூரை விட்டுப் புறப்பட்டு அமராவதி, காவிரி தீரங்களிலுள்ள கருவூர், கொடுமுடி, நெரூர் முதலிய ஊர்களில் வசித்து வந்தார். இக்காலத்திலிருந்து அவர் அவதூத நிலையைக்கொண்டார். காவிரி நதிக்கரையிலுள்ள காடுகளில் மறைந்து பல நாட்கள் வசிப்பதும், பிறகு திடீரென்று ஒரு கிராமத்தில் நுழைந்து மக்களிடையே தோன்றுவதும், பின்பு திடீரென்று மறைந்து காட்டகத்தை யடைவதுமாகப் பிரம்மேந்திரர் காலங் கழித்து வரும் நாளில் சுற்றுப்புறங்களிலிருந்த கிராமவாசிகள் அவரை மகானென்று அறிந்து போற்றி வந்தார்கள்.

---

"முதலில் உன்னைத் திருத்திக்கொள்—பிறகு மற்றவனுக்குச் சொல்"

# மனோ சக்தி.

(சகதீச குமார சர்மா.)

(638-ம் பக்கத் தொடர்ச்சி.)

நான் நம்பிக்கையின் வல்லமையை உமக்குச் சிறிது விளக்கிக் காட்டுகிறேன். திருமுருகன் மீது நிலையான பக்திகொண்ட அடியார் ஒருவர் திருமுருகனுக்காக ஒரு பெரிய ஆலயம் கட்டவேண்டுமென்று தீர்மானிக்கிறார். அவர்பால் அதற்குப் போதிய திரவியமில்லை, அவர் பரம ஏழை எனினும் அவர் திருமுருகனது அருளால், "யான் இதனை எவ்வாறாயினும் நிறைவேற்றுவேன். முருகனது நாமத்தை மனத்திலே தியானித்துக் கொண்டு நான் யாரிடத்தில் சென்றாலும் எவரும் எனக்கில்லை எனமாட்டார். நான் திருமுருகனது வல்லமையினாலே எவரையும் மேற்கொண்டு என் சித்தத்திற்கு இணங்கச்செய்யும் வல்லமை பெற்றுள்ளேன்" என்று நம்புகிறார். அவர் முருகக் கடவுளினது அருளால் தமக்கு அளவிறந்த வல்லமை ஏற்பட்டிருக்கிறது என்று திட்டமாய் நம்புகிறார். இங்ஙனம் அவருக்குச் சுயவல்லமையில் அளவிறந்த நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது. இவ்வாறான சுயநம்பிக்கை ஏற்பட அவர் நெடுநாள் முயன்று வந்தார். அவர் நிமிஷந்தோறும் முருகனது அருளால் தமக்கு எதுவும் கைகூடுமென்று தம்முடைய மனத்தை நம்பச் செய்தார். முருகக்கடவுளுடைய வல்லமை தமக்கும் உரியது. அது தம்மிடத்தில் ஏற்பட்டுவிட்டது என்று தம்முடைய மனத்தை திட்டமாக நம்பச் செய்தார். இங்ஙனம் சுயவாத்ம சக்தியில் நம்பிக்கை கொண்ட அவ்வடியார் முருகனுக்குக் கோயில் கட்டப் பொருளீட்டும் பொருட்டுப் பெரிய சீமான்களிடம் செல்கின்றார். அச் சீமான்கள் எல்லோரும் அவருடைய திடமான நம்பிக்கையின் எதிர் நிற்கமாட்டாமல் அவருக்குத் தேவையான பொருளைக் கொடுக்கின்றனர்.

முருகனுடைய அடியாரிடத்திலேற்பட்ட ஆத்தும சக்தியின் நம்பிக்கைக்கு முருகக் கடவுள் துணையாய் நின்றார். அடியாரிடத்தில் இயல்பாகவே அளவிறந்த ஆத்தும சக்தி விளங்கிக்கொண் டிருந்தது. ஆனால், அது எங்கோ ஓரிடத்தில் மறைந்து தூங்கிக் கொண்டிருந்தது. அந்தச் சக்தியைத் தட்டி எழுப்ப அவ்வடியார் முருகக் கடவுளாகிய சாட்டிக் கோலை உபயோ

---

"நன்றாக உழை நன்றாகப் பிழை"

கித்தார். முருகக் கடவுள் அடியாரின் உள்ளத்திலிருந்த சர்வ வல்லமையைத் தட்டி எழுப்பும் வெளித்துணையாய் நின்றார். வெளித் துணையின்மேல் அடியாருக்குப் பரிபூரண நம்பிக்கை இருந்ததினால், தம்முடைய வல்லமையிலும் பரிபூரண நம்பிக்கை ஏற்பட்டது. முருகக் கடவுளிடத்தில் பரிபூரண நம்பிக்கை இருந்திரா விட்டால் அவருக்குத் தம்முடைய சக்தியிலும் பரிபூரண நம்பிக்கை ஏற்பட்டிராது. ஆனால், மனிதன் ஆத்தும சக்தியைப் பெறுவதற்கு வெளித் துணைகளில் நம்பிக்கை வைக்கவேண்டு மென்றாவது, வெளித்துணைகளையே சார்ந்திருக்க வேண்டுமென்றாவது நியதி இல்லை. மனிதன் வெளித் துணைகளில்லாமலே தன் ஆத்தும சக்தியை எழுப்பிக் கொள்ளக்கூடும். அதுவே சுலபமான வழி. ஆயினும் மனிதன் தனக்கு நாயகனாகிய கடவுளை மறந்து ஆத்துமசக்தியை அடையும்பொழுது, ஆணவம் மிகுந்து, மனத்தத்துவங்கட்கு விரோதமான நெறியில் சென்று வினைகள் ஆற்றி வெற்றிபெற முயலுவான். அப்பொழுது இடர்ப்பட்டு விழுவான். அவ்வாறு இடர்ப்பட்டு விழும்பொழுது, தான் அடைந்திருந்த ஆத்துமசக்திக்குப் போதிர்ச்சி உண்டாகும். அதனால் அவன் தன் வலிமையை இழக்க நேரிடும்.

எனினும் உண்மைக்கு விரோதமின்றிக் கூறுமிடத்து ஒருவன் தன் சுயசக்தியில் நம்பிக்கை வைப்பதினால் எத்தகைய நஷ்டத்தையும் அடையாது இலாபத்தையே அடைவான். மனிதனின் மனவலிமை, எல்லாம் வல்ல கடவுளின் சித்தவலிமைக்கு இசைந்தே இருக்கு மாதலால், அவன் தன் சுயவல்லமையில் நம்பிக்கை வைப்பதோடு அது கடவுளிடத்திலிருந்து வருகின்றதென நம்புவதும் இன்றியமையாத தாகும். இதனை விரிக்கிற் பெருகும்.

## பேராசை

பேராசை என்னும் சொல்லை யான் கீழானபொருளில் வழங்காது, மனத்தத்துவ சாஸ்திரத்தின் ஒரு சொல்லாக வழங்குகின்றேன். ஆதலால், இச்சொல்லின் பொருளை மனத்தத்துவ சாஸ்திர முறையில் விளக்கிக் கொள்ளுதல் அவசியம். மனிதன் உள்ளதைக்கொண்டு திருப்தி யடையாது, தனக்குச் சர்வ வல்லமை உண்டென்றும், தன் வல்லமையினால் இவ்வுலகையே தன்னடிப்படுத்தக் கூடும் என்றும் நம்பித் தன்னிலையிலிருந்து மிகவும் உயர்ந்த ஒரு பதவியை நாடுமுயலுதலே யாம். சாதாரணமாக, மனிதர்கள், "போதுமென்ற மனமே பொன் செய்யு மருந்து" எனவும், "உள்ளதைக்கொண்டு திருப்தியடை" எனவும், பல நீதிகளை ஓலமிட்டுரைவார்கள். ஆனால், தன் ஆத்தும சக்தியை உணர்ந்த ஒரு மனிதன், அவ்வாறான பழமொழிகளைக்கேட்டு நகைப்பான். அவன் கடவுளுக்கு நிகரான ஒரு பதவியைத் தவிர வேறெதனாலும் திருப்தியடைய மாட்டான். விஸ்வாமித்திரர் தம் அரசுரிமையினால் திருப்தி அடையவில்லை. திரிசங்குவிற்காகப் புதியதோர் உலகைப் படைக்கும் திவ்விய சக்தியினாலேயே திருப்தி

---

யடைந்தார். வசிஷ்டர் சாதாரணத் துறவியாய் இருப்பதில் திருப்தி யடையவில்லை. விசுவாமித்திரரும் முடிவணங்கும் பிரம்மரிஷியாய் இருப்பதினாலேயே திருப்தி யடைந்தார். உலகத்தைத் துறந்த நிஜமான துறவிகள் கீழான ஆசைகளை வேண்டாமென்று திரஸ்கரித்து மேலான கடவுளியல்பையும் சக்தியையும் அடைவதினாலேயே திருப்தி அடைந்தனர். அங்ஙனமாயின், மனிதன் மட்டும், "போதுமென்ற மனமே பொன் செய்யு மருந்து" என்றிருத்தல் தகுதியோ? மனிதன் முழுப் பேராசை உடையவனாய் இருத்தலே பிரகிருதி. பேராசை இல்லாதவன் இயற்கைக்கு விரோதமானவன். எவனாயினும், "ஐயா, எனக்கு பேராசையே இல்லை; நான் உள்ளதைக்கொண்டு திருப்தி யடைகிறவன்" என்று கூறுவானாயின் நாம் உடனே அவனை பொய்யன் என்றே கூறவேண்டும். அவன் தன் சுபாவத்திற்கு விரோதமான ஒரு காரியத்தைச் சொல்லுகிறான் என்று திட்டமாய்க் கூறலாம். ஏனெனில், மனிதனுடைய ஆத்மா, நிலையான பேரின்பத்தையும் நிலையான சர்வசக்தியையும் நித்தியத்துவத்தையும் நாடும் முயற்சி உடையது. இம் முயற்சியானது மனிதனுடைய ஆத்துமாவில் இலயித்து, மன முதலிய கரணங்களின் வாயிலாய் வெளிப்படுகின்றது. வெளிப்படு முயற்சியில் கரணங்கள், பாஹியப் பொருள்களின் சேர்க்கையினால், ஆத்துமாவின் நோக்கத்தைத் தெளிவாக அறிய முடியாது. முற்றிலும் மாறுபட்ட நெறிகளிலே செல்லத் தலைப்படுகின்றது. ஒருமனிதன் ஒரு பெண்ணைக் காதலிக்கின்றான். இக்காதல், ஆத்துமாவுக்கும் ஆத்துமாவுக்கும் இயல்பாக அமைந்த அன்பின் ஸ்புரணங்களேயாம். ஆனால், அதே ஸ்புரணங்கள், கரணங்களாகிய வழிகளினூடு வெளிப்படும் பொழுது, பல காரணங்களால், ஆத்துமிக ஸ்புரணங்கள் சிதறி விடுகின்றன. ஆனால், அதன் எதிரொலி மட்டும் மனத்தில் தட்டுகின்றது. அந்த எதிரொலி வெளி உலகத்து ஸ்புரணங்களோடு தாக்குண்டு முற்றிலும் வேற்றுமைப் பட்டு உலகத்தன்மை அடைகின்றது. இவ்வாறாக, மனிதன் ஆத்துமாவின் நோக்கத்தை இழக்கிறான். ஆயினும், அவனது உள்ளேறான நோக்கம் பேரின்பத்தையும், நிலையான சர்வ சக்தியையும் நித்தியத்துவத்தையும் நாடவேண்டு மென்பதேயாம். இந்நோக்கங்களின் நிழலாட்டமே அவனைச் சிற்றின்பங்களையும் அதிகாரத்தையும் சரீர வலிமையையும் காமாதி ஆசைகளையும் செல்வத்தையும் நாடச் செய்கின்றது. ஒரு மனிதன் கோடி கோடியாகப் பொருளீட்டிய பிறகும், மேலும் பொருளீட்ட முயலுகிறான். ஏன்? பொருளால் பேரின்பமும், பெருவாழ்வும், அதிகாரமும் சர்வ சக்தியும் கிட்டுமெனக் கருதுகின்றான். அப்பொருளைப் பிறருக்கு வழங்குவதினால், தன் இன்பமும் வாழ்வும் அதிகாரமும் சர்வசக்தியும் நீங்கிவிடுமெனக் கருதுகின்றான். பல காரணங்களால் பொருள் தன்னை விட்டகலு மென்னும் அறிவு பிரத்தியக்ஷ ஞானத்தால் அவன் அறிந்திருக்கிறானாதலால், அதனை மேன் மேலும் சேகரித்து ஒரு பொழுதும் கரையாது மலை போலக் குவிக்கப் பாடுபடுகின்றான். இப்படியே ஒவ்வொன்றையும் விளக்குதல் கூடும். ஆதலால், மனிதன் ஆத்துமாவின் பேராசைகளின் உண்மையான நிலையையும் மாட்சிமையையும் காணக்கூடாதவனாகி, கீழான நிழலாட்டங்களில் பேராசை கொள்கின்றான். இதற்காக நாம் அவனைக் குறை கூறுதல் தகுதியன்று. இஃது அந்தரங்கத்திலுள்ள பேராசைகளின் மறு ரூபமேயாம்.

# திருநாவுக்கரசு சுவாமிகள் மாட்சி.

—⁂—

(தமிழ்ப் பண்டிதர், ஆ. கமலநாத முதலியார்.)

(410-ம் பக்கத் தொடர்ச்சி)

அத் திருப்பதியினின்றும் திருநாவுக்கரசு சுவாமிகள் திருப்பழனத்திற்குப் போய்க் கடவுள் தரிசனஞ் செய்து திங்களூர் வழியாகப் போய்க்கொண்டிருந்தபோது அவ்வூரிலே அப்பூதியடிகள் தமது புதல்வருக்குத் திருநாவுக்கரசு என்னும் திருப்பெயரைத் தரித்தும், தமது அன்னசாலை, கிணறு, குளம், தண்ணீர்ப் பந்தல் முதலியவற்றைத் திருநாவுக்கரசு என்னும் பெயரால் அமைத்தும் இருத்தலைக் கேட்டும் கண்டும் அவரது திருமாளிகைக்குச் சென்றருளினார். அவ்வமயம் திருவமுது செய்யவேண்டுமென்று வேண்ட திருநாவுக்கரசு நாயனாரும் சம்மதித்தார். அப்பூதியடிகள் தம் பெரிய புதல்வராகிய திருநாவுக்கரசை வாழைக்குருத்தைக் கொய்து வரும்படி யேவினார். அப்பிள்ளை வாழைக்குருத்தைக் கொய்யும்போது அரவமொன்று தீண்டிற்று. அதை அவர் சிறிதும் கவனியாது வாழைக் குருத்தைத் தாயார் கையிற் கொடுத்து நிகழ்ந்த விஷயத்தைச் சொல்லி இறந்தார். உடனே சவத்தை மறைத்தும் திருநாவுக்கரசு சுவாமிகள் நிகழ்ந்த விஷயத்தைத் திருவருளாலுணர்ந்து பிணத்தைச் சிவாலயத்தின் முன் கொணர்வித்து "ஒன்று கொலா" மென்னும் முதற்குறிப்புள்ள பதிகம்பாடிப் பிள்ளையை உயிர்ப்பித்தார். பின்னர் அப்பூதியடிகள் நாயனார் வீட்டில் அமுது செய்து அவ்வீடத்தில் சில நாள் தங்கிப் பின்னர் அவ்வூரினின்றும் நீங்கித் திருப்பழனத்தை யடைந்து "சொன்மாலை பயில்கின்ற" என்னும் முதற்குறிப்புள்ள திருப்பதிகத்தைப் பாடியருளி அதிலே அப்பூதி நாயனாரைச் சிறப்பித்து அங்கே எழுந்தருளியிருந்தார். இருந்தபோது திருச்சோற்றுத்துறை முதலிய திருப்பதிகளுக்குப் போய்ச் சுவாமி தரிசனஞ் செய்து திரும்புவார். நெடுநாள் கழிந்த பின்னர், தாண்டக வேந்தர் திருநல்லூருக்குச் சென்று சுவாமி தரிசனம் பண்ணித் திருத்தொண்டு செய்துவந்தார். செய்து வந்த காலத்தில் திருவாரூரைக் கண்டு தொழுது நல்லூரை விடுத்து நீங்கி, பழயாறை, திருவலஞ்சுழி, கும்பகோணம், நாலூர், திருச்சேறை, திருக்குடவாயில், திருநாறையூர், திருவாஞ்சியம், பெருவேளூர், திருவிளமர் என்னும் திருப்பதிகளைத் தரிசித்துத் திருவாரூரை யடைந்து எதிர்கொண்ட அடியார்களோடு "குலம்பலவாய குண்டர் முன்னே" என்னும் திருப்பதிகம் பாடிக் கொண்டே திருவீதியினுள்ளே நுழைந்து தேவாசிரிய மண்டப நுழைந்து, புற்றிடங் கொண்ட பெருவாழ்வைக் கண்டு தொழுது, "கற்றவர்கள் கனிக்

---

"உறுதியான நம்பிக்கை நிச்சயமான வெற்றியைத் தரும்"

தண்ணுங்கனியே போற்றி" என்னும் போற்றித் திருத்தாண்டகத்தைப் பாடினார். இன்னும் பல திருப்பதிகங்களை யோதிக் கொண்டு அவ்வூரிலேயே இருந்தார். ஒரு பதிகத்திலே நமிநந்தியடிகள் திருத்தொண்டையுஞ் சிறப்பித்தார். அத் திருவாரூரிலேயுள்ள அரனெறியென்னும் தலத்தைத் தெரிசித்துப் போற்றினார். அப்படியிருக்கு நாட்களிலே திருவலிவலம், கீழ்வேளூர், கன்றாப்பூர் முதலிய திருப்பதிகளுக்குப் போய்ச் சுவாமி தரிசனஞ் செய்து திருவாரூருக்கே திரும்பிவிட்டார்.

திருநாவுக்கரசு சுவாமிகள் திருவாதிரைத் திருத்தினத்திலே வீதிவிடங்கப் பெருமானைத் திருத்தொண்டர்களோடு தரிசித்துத் திருப்புகலூரை யடைந்தார். அது காலை அவ்வூர் முருகநாயனார் மடத்திலே எழுந்தருளியிருந்த ஆளுடை பிள்ளையார் அப்பர் சுவாமிகள் வருதலைக் கேள்வியுற்றுத் திருக்கூட்டத்தோடு எதிர் கொண்டார். அப்பர் சுவாமிகள் ஆளுடையபிள்ளையாரை வணங்க, பிள்ளையாரும் எதிர் வணங்கி, "அப்பரே நீர் வரும் நாளிலே திருவாரூரிலே நிகழ்ந்த பெருமையை வகுத்துரையும்" என்றார். அவரும் "முத்துவிதானம்" என்னும் திருப்பதிகத்தால் விளக்கினார். உடனே ஞானசம்பந்தப் பெருந்தகையார் திருவாரூருக்குச் சென்று சுவாமி தரிசனஞ் செய்துவருவேன் என்று அருளியதும் அப்பர் சுவாமிகள் திருப்புகலூரை யடைந்து சுவாமி தரிசனஞ் செய்து, "செய்யர் வெண்ணூலர்" என்னும் தமிழ்ப்பாமாலைகள் சாத்தித் திருத்தொண்டுக ளியற்றிவந்தார். திருச்செங்காட்டங்குடி, திருநள்ளாறு, சாத்தமங்கை, திருமருகல் என்னும் தலங்களைத் தரிசித்து, திருப்புகலூருக்குத் திரும்பினார். கவுணியர் கோன் திருவாரூரைவிட்டு நீங்கித் திருப்புகலூருக் கெழுந்தருளினார். அப்பர் சுவாமிகள் அவரை யெதிர்கொண் டழைத்துவந்தார். அந்நாளில் சிறுத்தொண்ட நாயனாரும் அத்திரு மடத்தி லெழுந்தருளி யிருந்தார்கள்.

சின்னாள் கழிந்தபின்னர் சீகாழிவள்ளலோடு திருத்தாண்டகச் சதுரர் புகலூரில் நின்றும் நீங்கித் திருவம்பர், திருக்கடவூர் முதலிய க்ஷேத்திரங்களுக்குப் போய்ச் சுவாமி தரிசனஞ் செய்து திருவீழிமழலை யடைந்து போரானையென்னும் திருத்தாண்டகத்தை யோதி அங்கே தங்கியிருந்தார். சில நாள் சென்றபின் அங்கு மாரி சுருங்கிய படியாலும், காவேரி வற்றியபடியாலும், பெரும் பஞ்சம் உண்டாகி உயிர்களை வருத்தியது. அதனைப்போக்குதற்குச் சிவபெருமான் திருஞான சம்பந்த சுவாமிகளுக்கும் திருநாவுக்கரசு சுவாமிகளுக்கும் முன்பாகத் தோன்றி, "கலல் நிலைமையால் நீங்கள் மனவாட்டம் அடையீர்கள். ஆயினும் உங்களை வழிபடும் தொண்டர்களுக்காக உங்களுக்குப் படிக்காசு தருகின்றோ" மென்று கூறி ஆலயத்தின் கிழக்குப் பீடத்திலும் மேற்குப் பீடத்திலும் நாடோறும் படிக்காசு வைத்தருளினார்.

---

அவ் விருவர்களும் அரனருளால் பெற்ற படிக்காசுகளால் சிவனடியார்களுக்
குத் திருவமுது செய்வித்தார்கள். திருஞான சம்பந்தர் சிவகுமார் ஆகலா
னும் பாடல் தொண்டை மாத்திரம் செய்தமையாலும் வாசியிலாக் காசு
பெற்று வந்தார். சிவனடியார்கள் துன்பமின்றித் திருவமுது செய்து மன
மகிழ்ந்திருக்கு நாளில் பஞ்சம் நீங்கிற்று. அப்பர் சுவாமிகளும் ஆளுடைய
பிள்ளையாரும் திருவீழிமிழலை விடுத்துத் திருவாஞ்சிய முதலிய பதிகளைத்
தரிசித்துத் திருமறைக் காட்டை யடைந்து வேதங்கள் பூசித்துச் சாத்தப்
பட்ட ஆலயத்தின் கதவுகளை இருவரும் திறக்கவும் மூடவும் பாடி யாவ
ரும் என்றும் பணிந்து வணங்கும்படிச் செய்தார்கள். பின்னர் சைவப்
பெருந்தகை யாளர்களாகிய அவ்விருவரும் மடத்தை யடைந்தார்கள்.
திருநாவுக்கரசு சுவாமிகளுக்குப் பதிகத்தின் இறுதியில் கதவு திறக்கப்பட்ட
அருமையும் திருஞான சம்பந்தப் பெருமானுக்குப் பதிகத் தொடக்கத்தி
லேயே கதவு அடைக்கப் பட்ட எளிமையையும் கருதிக்கவன்று நித்திரை
செய்தார். அவ்வமயம் சிவபெருமான் தரிசனந் தந்தருளி நாம் வாய்மூரி
லிருப்போம் தொடர வாவென்று கூறி மறைந்தருளினார். திருநாவுக்கரசு
சுவாமிகள் சிவபெருமான் கட்டளைப்படித் திருவாய்மூருக்குச் சென்றார்.
திருநாவுக்கரசர் திருவாய் மூருக்குச் சென்றதை யறிந்து திருஞான சம்பந்த
சுவாமிகளும் வந்து சேர்ந்தார். அப்போது திருநாவுக்கரசு சுவாமியைப்
பார்த்து எனக்குத் திருவுருவை மறைக்கலாம், ஒரு திருப்பாட்டாலேயே
திருக்கதவை அடைப்பித்த ஞான சம்பந்தர் இவ்விடம் வந்திருக்கின்றார்.
அவருக்கு எங்ஙனம் மறைப்பது? என்றார். சிவபெருமான் திருஞான சம்பந்த
மூர்த்தி சுவாமிகளுக்குத் தரிசனந் தந்தார். அவர் கண்டு தொழுது அப்பர்
சுவாமிகளுக்குக் காட்ட அவர் தரிசித்து "பாடவடியார்" என்னும் திரு
தாண்டகத்தைப் பாடியருளினார்.

பின்னர் இருவர்களும் சில நாள் அங்கிருந்து வேதாரண்ணிய
மடைந்தார்கள். அந்நாளில் திருஞான சம்பந்தர் மங்கையர்க்கரசியாரும்
குலச்சிறை நாயனாரும் அனுப்பிய தூதுவர்களால் பாண்டிய நாடு முழு
வதும் சமணசமயமா யிருப்பதை யறிந்து சைவ சமயமாக்கக் கருதித்
திருநாவுக்கரசு சுவாமிகள் தடுத்துங் கேளாதவராய்த் தமிழ் நாட்டிற்குப்
புறப்பட்டார். வாகீசர் திருமறைக் காட்டில் நின்றும் நீங்கி, திருநாகைக்
காரோணம், திருவீழிமிழலை முதலிய திருப்பதிகளைத் தரிசித்துத் திருவா
வடுதுறை யடைந்து சுவாமி தரிசனஞ்செய்து திருப்பழையாறை யென்னுந்
திருப்பதிக்குச் சென்றார். அப்பதியில் வடதளி யென்னும் சிவாலயத்தி
லெழுந்தருளியுள்ள சிவபெருமானைச் சமணர்கள் மறைத் திருத்தலைக் கேள்
விப் பட்டுச் சிவபெருமான் திருவடிகளைத் தியானிக்கச் சிவபெருமான் அரச
னுக்குத் தாமிருக்கும் இடத்தைக் குறிப்பித்துக் காட்டக் கண்டு திருநாவுக்
கரசு சுவாமிகளையும் வணங்கிச் சிவபெருமானுக்கு விமானம் அமைத்தும்
ஆலயத் திருப்பணிகளை யியற்றியும் வந்தனர். அப்பர் சுவாமிகள் சந்நிதி
யடைந்து சிவபெருமானைக்கண்டு தொழுது, "தலையெலாம்" என்று திருப்ப
கம்பாடி அங்குத் திருத்தொண்டு செய்திருந்தார். பின் அப்பதியைவிட்டுத் தி
ருவானைக்கா திருவெறும்பியூர், திரிச்சிராப்பள்ளி, திருக்கற்குடி, திருப்பராய்த்
துறை என்னுந் திருத்தலங்களைத் தரிசித்துத் திருப்பைஞ்ஞீலியை நோக்

கிப் பசியாலும் தாகத்தாலும் மிகவாடியும் சித்த மலையாது நடந்தார். அருட் கடலாகிய அம்பிகாபதி அடியவர் பசியைத் தீர்க்கும் பொருட்டுச் சோலையும் குளமும் உண்டாக்கி ஒரு சிவ வேதியர் கோலந்தாங்கிப் பொதிசோறு வைத்துக்கொண் டிருந்து தாண்டக வேந்தர் அருகேவந்து, "நீர் பசித் திருக் கின்றீர்; என்னிடம் பொதி சோறிருப்பதை யுண்டு இக் குளத்தில் தண்ணீர் அருந்தி இளைப்பு நீங்கு" மென்றார். திருநாவுக்கரசும் அவ்வாறே செய்த பின் வேதியராகிய சிவன் அப்பரை நோக்கி 'நீர் எவ்விடம் போகின்றீர்?' என்று வினவ, நாயனார் நான் திருப்பைஞ்ஞீலிக்குப் போகின்றே னென்றார். அந்தணர் நானும் அப்பதிக்கே போகின்றேனென்று அடியவர் பெருமானுடன் சென்று திருப்பைஞ்ஞீலியைக் குறுகியதும் மறைந்தருளினார். திருநாவுக்கரசு சுவாமிகள் திருக்கருணையை வியந்து, திருக்கோயிலுட் சென்று, சிவதரிசனஞ் செய்து, திருப்பதிகம்பாடித் தொண்டை மண்டலத்தை யடைந்து திருவோத்தூரைத் தரிசித்துக் காஞ்சிபுரத்துக்குப் போய்த் திருவேகம்பம், திருக்கச்சி மயானம், திருமாற்பேறு, முதலிய திருத்தலங்களைப் பணிந்து பதிகம்பாடி, திருக்கழுக்குன்றம், திருவான்மியூர், திருமயிலாப்பூர் திருவொற்றியூர், திருப்பாசூர், திருவாலங்காடு, திருக்காரிக்கரை என்னுந் திருப்பதிகளைத் தரிசித்துப் பதிகம் பாடிக் கண்ணப்ப நாயனார் திருவடிகளை வணங்கி அங்கே தங்கி யிருந்தார்.

பிறகு வாகீசர் கயிலை மலையில் கண்ணுதற்பிரான் பார்வதியாரோடு எழுந்தருளிய கோலத்தைப் பார்த்துப் பணிய விரும்பி திருக்காளத்தியினின்றும் நீங்கி, ஸ்ரீ. சைலத்தைத் தரிசித்துத் தமிழ் வேதம் பாடி, தெலுங்கு, கன்னடம் மாளவ முதலிய தேசங்களையும் பல நதிகளையும் வனங்களையும் கடந்து, காசியைக்கண்டு பணிந்து தம்முடன் வந்தவர்களை அங்கே நிறுத்திச் சமூகமூல பலங்களை உண்பதையுந்தவிர்த்து, கற்சுரத்திலே இரவும் பகலுமாய் நடந்ததால் பாதங்கள் தேய்ந்தன. தேய்ந்தும் அவ்வெம்பாலை நிலத்தில் கைகளால் தாவிச்சென்றார். கைகளும் கரைந்து சிதைந்தன. கயிலையங்கிரியைத் தரிசிக்க வேண்டுமென்னும் அளவிலாசை பொங்கி யெழப் பருக்கைக் கற்கள் நிறைந்தவழியிலே மார்பினால் நகர்ந்தார். மார்பும் நைந்து தேய எலும்புகள் முறிந்தன. பின்னர் உயிர்களுக்காகப் புரண்டு புரண்டு சென்றனர். உடலுந் தேய்ந்தது. கையிலையைத் தரிசிக்கவேண்டுமென்று மெதுவாக நகர்ந்து செல்ல முயன்றார். முயன்றும் முடியாமல் செயலற்றவராய் வழியிலே கிடந்தார். அதுகாலை அருளையே திருமேனியாகவுடைய பிரான் திருநாவுக் கரசு சுவாமிகளை மீளவும் தமிழ் வேதம் பாடுவித்து உலகை உய்விக்கத் திருவுளங்கொண்டு நாயனார்முன்னேவந்து 'நீர் உறுப்புக்களெல்லாம் அழிந்திட வருந்தி அக்கினியிலுங் கொடிய இவ்வெங்கானகத்தில் எதற்காக வந்தீர்'? என்றார். வாகீசர் அம்முனிவரைக் கண்டவுடன் தமக்குப் பேச முணர்வு சிறிது தோன்ற 'முனிவரே வட கயிலையில் மலைமகளோடு மாதேவன் வீற்றிருந்தருளும் திருக்கோலத்தைக் கண்டு தொழவந்தே' னென்றார். கயிலையங்கிரியை எளிதிலடைவீரோ நீர் திரும்புதல் நலம் என்ன, தாண்டக வேந்தர் கயிலையில் எழுந்தருளியுள்ள இறைவர் திருக்கோலத்தைத் தரிசியாது அழியும் இவ்வுடல் கொண்டு திரும்பேனென்று மறுத்தார். சிவபெருமான் அடியார் உறுதியை அறிந்து ஆகாயத்திலே அசரீராய் 'நாவுக்கரசனே எழுந்திரும்' என்றார்.





## கிருஷ்ணாவின் அல்லது துப்பறியும் சீடன்.

(573-ம் பக்கத் தொடர்ச்சி)

**ஆரணி-குப்புசாமி முதலியார்.**

ஆனந்தஸிங் கௌரவத்தை நோக்கத் தன் உயிரைத் துரும்பாய் மதிப்பவன். ஆகையால் இனி யொரே வழிதா னிருக்கிறதென்று தனக்குள் தீர்மானித்துக் கொண்டு கற்பகத்தை நோக்கி, "இதைத் தவிர என் நன்றியைக் காட்ட வேறு மார்க்கமில்லையோ வென்று" வினவினான். கற்பகம் இல்லை யென்றாள்.

ஆனந்த:—"சரி யுன் சொற்படியே நான் இனி யிந்த விஷயத்தில் பிரவேசிப்பதில்லை" என்றான்.

இதைக்கேட்டு மிக்க சந்தோஷமடைந்த அக் கன்னிகை "ஹா! உன் உதார குணத்திற்கும் நீதிக்கும் நான் என்ன கைம்மாறு செய்வேன்" என்று வியப்போடு கூறினாள்.

ஆனந்த:—இல்லை யில்லை நான் நன்றி யொன்றையே கருதி நடக்கிறேன்.

கன்னி:—என்ன செய்யப் போகிறாய் ?

ஆனந்தஸிங் வெளுத்த முகத்தோடும் ஒருவிதத் துணிகரத்தோடும் "இனிமேல் நான் என்ன செய்யப்போகிறே னென்பதைப் பற்றி யுனக் கொன்றும் அக்கறையில்லை. நீ காப்பாற்றிய என் உயிருக்கு நீ கேட்ட விலையைக் கொடுத்து விட்டேன். நாம் பிரிந்து போகு முன் உன்னிடம் ஒரு சமாசாரம் கூறவேண்டும். "ஹா சற்று பொறு. இதோ இரண்டு நிமிடங்களில் வருகிறேன்" என்று கூறிவிட்டுத் தன் ஸ்நான அறைக்குட் சென்று நிறம் மாற முகத்தில் பூசியிருந்த சாயத்தைக் கழுவிவிட்டு மாறு வேடத்தைக் களைந்து தன் சுயரூபத்தோடு திரும்பி வந்தான்.

சற்று நேரத்திற்கு முன் தன்னிடம் பேசிக் கொண்டிருந்த முரட்டு மனிதன் போய் இப்போது அழகு வாய்ந்த நாகரிகமான வாலியப் பெரிய மனிதன் தன் எதிரில் நிற்பதைக்கண்ட அக்கன்னிகை சொல்லணாப் பிரமை யடைந்தாள்.

ஆனந்தஸிங் அவளை நோக்கி "இதோ பார். இதுவே என் சுயரூபம். நான் இப்போது கூறப்போகும் விஷயம் உன் மனதில் நன்றாய்ப் படுவதற்காக நான் என் சுயரூபத்தை யுனக்குக் காட்டினேன். இப்போது நீயும் உன்

---

"கேட்ட தெல்லாம் நம்பாதே, நம்பின தெல்லாம் சொல்லாதே"

தாயும் உடந்தையா யிருக்கும் அந்த துஷ்டக் கள்ளர்களுடைய செய்கை யின்னதென்று உனக்குத் தெரியுமல்லவா?" என்றான்.

கன்னிகை:—அய்யா! எனக் கொன்றும் தெரியாது என்று கோபத் தோடு கூறினள்.

ஆனந்தஸிங் என்னை யேமாற்ற முயலவேண்டாம் என்ற குறிப் போடு,

"இரு எனக்குத் தெரியும். நீ மனோன்மணி போல் மாறுவேடம் பூண்டு பாங்கியிலிருந்து திரும்பிவரும்போது உன்னைத் தொடர்ந்து வந்தவன் நானே. ஒரு அன்னிய நாட்டு ஸ்திரீபோல் மாறு வேடம் பூண்டு உன் தாயாரை யேமாற்றி வைத்தியருக்காக வெளியில் செல்லச் செய்து இரண்டு வீட்டிற்கு மிடையிலுள்ள அலமாரியி லிருக்கும் கள்ளவழியைக் கண்டு பிடித்தவன் நானே" என்றான்.

அக்கன்னிகை மிக்க வியப்போடு "நீயா?" என்றாள்.

ஆனந்த:—ஆம் நான்றான். இப்போது உனக்கு எதில் பிரியமில்லை யென்பதை யான் அறிந்து கொண்டேன். என்னைக் காப்பாற்ற வெண்ணி நீ வந்த காரணம் என்னவென்றால், கொலை நடக்கும் விஷயத்தில் சம்பந்தப் பட உனக்குப் பிரியமில்லை. நான் கூறுவது சரிதானே?

கற்பகம்:—அதைப்பற்றி என்னைக் கேட்கவே வேண்டாம்.

ஆனந்தஸிங்:—அப்படியானால் இக்கள்ளர்கள் செய்யும் அக்கிரம விஷயத்தால் முன்னமே ஒரு ஆள் கொல்லப்பட் டிருப்பது உனக்குத் தெரியா தென்று நினைக்கிறேன்.

இதைக்கேட்டதே அவள் மிக்க பீதியும் கலவரமு மடைந்து "அய்யோ எந்த விஷயத்தில்? யார் கொல்லப்பட்டது?" என்று மிக்க திகிலோடும் ஆவலோடும் கேட்டாள்.

ஆனந்தஸிங் "அப்படியானால் கூறுகிறேன். விஷயம், மனோன்மணிக் கும் அவள் தந்தைக்கும் சம்பந்தமான விஷயம். கொல்லப்பட்டது யாரால் என்றால் பிச்சனாலும் குள்ளனாலும் என் தந்தை கொல்லப் பட்டதே" யென்றான்.

கற்பகம்:—"அய்யோ கடவுளே! அப்படி யிராது. இதில் ஏதோ தவ றிருக்கிறது. ஆம் அப்படித்தான் இருக்கவேண்டும்" என்றாள்.

ஆனந்தஸிங்:—"நான் கூறுவது உண்மை. என் தந்தை இவர்களால் கொல்லப் பட்டார் என்பது உண்மை. அவர்கள் என்னைக் கொல்ல செய்த ஏற்பாட்டைக் கண்ணால் பார்த்தும் இன்னும் நான் கூறுவதை யேன் நம்ப மாட்டேனென்கிறாய்? அப்படிப்பட்டவர்களுக்கு ஒருவரைக் கொல்வதோடு இரண்டு பேருக்கு மூன்று நான்கு பேர்களைக் கொல்வது மிக்க அலட்சியந் தானே. அந்தோ அழகும், ஜீவகாருண்யமும், பெருந்தன்மையான குண மும் உடைய நீ முன்னமே ஒரு குடும்பத்தைத் துக்கத்தில் முழுக வைத்து விட்டு ஒரு கொலையும் செய்து விட்ட இத்தகைய கள்ளக்கூட் டத்தில் எப்படி சேர்ந்தாய்? அக்கொலை பாதகங்களெல்லாம் உன் தலை மேலும் சேருமல்லவோ? இவ்வளவும் எதற்காக? அந்தோ நிலையற்ற பணத் திற்காக!" என்றான்.

---

"சாவு தவறாது"



# வர்த்தமானப் பகுதி

**மந்திரி ஆன ஏழை ஆங்கிலேயர்:—**

இங்கிலாந்தின் ஆகாய விமான இலாகா மந்திரியாக இருக்கும் ஸ்ரீ பிரட்மாண்டேகு என்பவர் ஒருகாலத்தில் வயிற்றுப் பிழைப்புக்காக லண்டனின் தெருக்களில் பத்திரிகை விற்று வந்தார் என்பது பலருக்கும் தெரியாமல் இருக்கலாம். 1899ம் வருஷத்தில் அவர் பன்னிரண்டு வயது பையனாக இருந்தபோது லண்டன் பிளீட் தெருவில் கடையே ஏற்படுத்திக்கொண்டு பத்திரிகை விற்றதாகவும், பற்பல சந்தர்ப்பங்களில் ஆகாரமில்லாமல் பட்டினி கிடந்தும், முன்னேற்றத்துக்கு வழிதோன்றாமல் கஷ்டப்பட்டு வந்ததாகவும் அவரே ஒப்புக்கொள்கின்றார்.

**அதிசயத்தைக் கண்டுபிடித்த மாது:-**

இங்கிலாந்திலுள்ள வெஸ்ட்மின்ஸ்டர் என்னும் நகரின் ஆஸ்பத்திரியில் விஞ்ஞான சாஸ்திர அறிஞராக இருக்கும் மிஸ். காத்லீன் சிவாசட் என்னும் மாது முடக்குவாதம் போன்ற நரம்பு சம்பந்தமான வியாதி அபிவிருத்தி யடைவதற்குக் காரணமென்ன என்பதைக் கண்டுபிடித்திருக்கிறார். சமீபகாலமாகக் கண்டுபிடிக்கப்பட்ட அற்புதங்களில் இதுவும் முக்கிய மானதாகும். இது சரியாக இருந்தால் இதைக்கொண்டே இன்னும் பல நோய்களின் காரணங்களைக் கண்டு பிடித்துவிடலாம்.

**சிறையில் நாட்டியம் கற்பித்தல்:—**

இங்கிலாந்தில் சிறைவாசத்தையும் எளிதாக்குவதற்காகப் பல சௌகரியங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. பெட்போர்டு சிறையில் இளைஞர்களான கைதிகளுக்கு நாட்டியம் கற்றுக் கொடுப்பதற்காக லார்டு ஆம்தில் என்பவரின் சுமார் 21-வயதுள்ள மிஸ் ரஸ்ஸெல் என்னும் பெயரையுடைய குமாரியை நியமித்திருக்கிறார்களாம். அப்பெண் வாரத்துக்கு ஒரு முறை சிறைக்குச்சென்று நாட்டியம் கற்றுக் கொடுக்கிறாராம். உள்நாட்டு இலாகா காரியதரிசியால் இந்த சௌகரியம் ஏற்பட்டதாம்.

**84-வயதுள்ள சினிமா மாது:—**

லண்டன் சினிமாக்களில் நடன மாடும் மாதர்களில் மிக வயோதிக பருவத்தை அடைந்தவர் மிஸ். ஹொரோஷியோ நெல்சன் என்பவராவார். அவ்வம்மையார் 200-நாடகங்களில் நடித்திருக்கிறார். அவர் பகலிலும் இரவிலும் ஓயாமல் உழைப்பதுண்டு. சிற்சில சமயங்களில் அவர் காலை 5-மணி முதல் இரவு 11-மணிவரை உழைத்துவிட்டுப் பிறகே வீட்டுக்குத் திரும்புவார்.

**ரயில்வே போர்ட்டரின் கவித்துவம்:-**

ரயில்வே போர்ட்டர்கள் கவிகளை இயற்றும் சக்தியுடையவர்களாக இருப்பது வழக்கமில்லை; ஆயினும் இங்கிலாந்திலுள்ள கிரேட் வெஸ்டர்ன் ரயில்வேயில் போர்ட்டராக இருந்த ஸ்ரீ. எட்வர்ட் டேவிஸ் என்பவர், தமது நண்பரின் குணாதிசயத்தைப் புகழ்ந்து பாடிய கவியானது அதிக இனிமையானதாக இருந்தது.

அமெரிக்கப் பெண்கள் ஆவல்:—

அமெரிக்க நாட்டுப் பெண்மக்கள், டைப் அடிப்போராகவும், கடைகளின் சாமான் விற்போராகவும், மற்றும் பல வேலைகளைச் செய்வோராகவும் சேர்ந்துகொள்ள மிகவும் ஆவலுடையவர்களாக இருக்கின்றனர்.

உலகப் பிரசித்திபெற்ற குயவர்:—

இங்கிலாந்திலேயே மண்வேலை செய்வதில் மிகப் பிரசித்தி பெற்று விளங்கிய ஜோசியா வெட்ஜ்வுட் என்பவரின் இரண்டாவது நூற்றாண்டு விழா சமீபத்தில் நடக்கப் போகிறது. அவர் 1730-ஆம் வருஷத்தில் பிறந்தவர். ஆரம்பத்தில் தன் சகோதரருடன் இருந்து பழைய முறையில் பானைகளைச் செய்தாரென்றாலும் 1759-ஆம் வருஷத்தில் தனியே இருந்து நூதன முறையில் பானைகளைச் செய்ய ஆரம்பித்தார். நான்கு வருஷங்களுக்குப் பின்னர் அவர் இயந்திர உதவியால் மண் பாண்டங்களைச் செய்யும் தொழிற்சாலையை ஸ்தாபித்து பல வகையான பாண்டங்களைச் செய்தார். அவருடைய பாண்டங்களை மகாராணியாரும் சிலாகித்து அவற்றையே வாங்கலானார்.

காமன்ஸ் சபையில் சமையல் போட்டி:—

பார்லிமெண்ட் சபையில் கன்சர்வேடிவ் கட்சி அங்கத்தினராயிருக்கும் ஸ்ரீ. ஓமர்ஸ்லே என்பவர் சமையலில் மிகத் தேர்ச்சி பெற்றவர். பன் என்னும் ஒரு வகை ரொட்டி செய்வதில் பெயர்போன பிராட்போர்டு என்னும் நகரத்தில் அவர் பிறந்தவர். இப்போது காமன்ஸ் சபை அங்கத்தினர்களுக்குள் மூவரிடையே சமையல் போட்டி ஒன்று நடக்கப் போகிறது. அதில் இவரும், மற்றும் ஜாக்ஹேய்ஸ், ஜாப்ரே மாண்டர் என்னும் இரு அங்கத்தினர்களும் கலந்துகொள்ளப் போகிறார்கள்.

90-வயதான இரட்டைச் சகோதரர்கள்:—

இங்கிலாந்து தேசத்திலேயே மிக வயதான இரட்டைச் சகோதரர்கள் லின்கன்ஷையரில் வசிக்கும் ஜான், வில்லியம் கூப்பர் என்னும் இரட்டைச் சகோதரர்களே யாவர். இவர்களுக்கு வயது 90. இரண்டு பேருடைய மனைவிமாரும் சென்ற வருஷம் இறந்துவிட்டனர். அவர்கள் பயிர்த் தொழில் செய்கின்றனர். அவர்கள் இது வரையும் மோட்டார்காரில் சவாரி செய்ததே இல்லை.

மிகப் பசியுள்ள மன்னர்:—

முன் ஒரு காலத்தில் பிரான்ஸ் தேசத்தை ஆண்டுவந்த பதினான்காவது லூயி என்னும் அரசர் மிகப் பசி யுள்ளவர் என்று சொல்லப்படுகிறது. அவர் ஒருமுறை சாப்பாட்டுக்கு உட்கார்ந்தால் நான்கு பேர் சாப்பிடக்கூடிய நான்கு இலைகளில் செலவாகும் சாதத்தைச் சாப்பிடுவாராம். அன்றியும் அவ்வளவு பதார்த்தங்களுடன் சாதம் சாப்பிட்டதும் சிப்பு சிப்பாகப் பழங்களையும், மொத்தை மொத்தையாக மாமிசத்தையும் உட்கொள்வாராம்.

பூமிக்குள் கூட்ஸ் ரயில்வே:—

லண்டன் நகர, தெருக்களிலிருந்து வெளியில் ஏற்றிச் செல்லவேண்டிய சாமான்களை ஏற்றிச் செல்ல பூமிக்குள் ஓடக்கூடிய கூட்ஸ் ரயில்களை அமைக்க ஏற்பாடு செய்து வருகிறார்களாம். அதற்காக அந்த ஒரு நகரத்தில் மட்டும் 54-ஸ்டேஷன்கள் இருக்குமாம். பெரிய கம்பெனிகள் தனக்கென ஸ்டேஷன்களை அமைத்துக் கொள்ளும். இப்போது லண்டனிலிருந்து வருஷ வாரி 12-கோடியே 50-லட்சம் டன் சாமான்கள் வெளியேறுகின்றனவாம்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**பிரமோதூதஹு ஆனி௴—கலியுகாதி 5032, சாலிவாகனம் 1853**

**பசலி 1339-40—கொல்லமாண்டு 1105—ஹிஜரி 1349,**

**இங்கிலீஷ் 1930ஹு ஜூன்௴—ஜூலை௴**

| ஆனி௴ | ஜூன்௴ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 15 | ஞா | சது32-10 | திரு54-25 | அ54-25ம | கரிநாள் ஷடசீதி புண்யகா [லம, 12-க்குள் மழை |
| 2 | 16 | திங் | பஞ்38-18 | அ 60 | சித்60 | |
| 3 | 17 | செவ் | சஷ்44-5 | அவி1-50 | சி1-50மர | |
| 4 | 18 | புத | சப்49-23 | சத9-8 | சி. 9-8அ | |
| 5 | 19 | வியா | அஷ்53-40 | பூர15-38 | சித60 | |
| 6 | 20 | வெ | நவ56-23 | உத்20-48 | சி20-48அ | |
| 7 | 21 | சனி | தச57-18 | ரே24-25 | மர24-25சி | |
| 8 | 22 | ஞாய | ஏகா55-58 | அஸ்26-5 | சித்60 | |
| 9 | 23 | திங் | து52-48 | ப✕25-48 | சி25-48ம | |
| 10 | 24 | செவ் | திர47-50 | கிரு23-28 | சி23-28அ | |
| 11 | 25 | புதன் | சது41-20 | ரோ19-28 | சித60 | |
| 12 | 26 | வியா | அ●33-13 | மிரு14-13 | மர60 | சர்வத்திர அமாவாசை |
| 13 | 27 | வெ | பிர25-10 | திரு8-5 | சித60 | சந்திர தெரிசனம் |
| 14 | 28 | சனி | துதி14-23 | புன1-23<br>பூச54-40 | சித்60 | அவமாகம், ரதயாத்ர ஆதி யை |
| 15 | 29 | ஞா | திரி7-45<br>சது59-38 | ஆயி48-23 | சி48-23ம | அவமாகம், மாசசதுர்த்தி விரதம் |
| 16 | 30 | திங் | பஞ்52-20 | மக42-55 | மர42-55சி | ஸ்கந்த பஞ்சமி |
| 17 | 1 | செவ் | சஷ்46-5 | பூர38-35 | சி38-35அ | சஷ்டிவிரதம், அவமாகம் |
| 18 | 2 | புதன் | சப்41-23 | உத்35-33 | அ35-33ம | ஆனித்திருமஞ்சனம் |
| 19 | 3 | வியா | அஷ்37-53 | அஸ்33-58 | சித்60 | தானியம் செலவிட |
| 20 | 4 | வெ | நவ36-10 | சித்33-53 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 21 | 5 | சனி | தச35-30 | சுவா35-8 | அ35-8சித் | லக்ஷ்மி விரதாரம்பம் |
| 22 | 6 | ஞா | ஏகா36-15 | விசா37-35 | மர60 | சர்வ, மத்வ ஏகாதசி |
| 23 | 7 | திங் | து38-10 | அனு41-15 | சித்60 | கோபத்ம விரதாரம்பம் |
| 24 | 8 | செவ் | திர41-3 | கே45-45 | ம45-45அ | பிரதோஷம், 10-க்குள்ம |
| 25 | 9 | புத | சது44-43 | மூல50-50 | ம50-50அ | பவித்ரோபணம் [ழை |
| 26 | 10 | வியா | ○49-8 | பூரா57-10 | சித்60 | பௌர்ணமி, வியாச பூஜை |
| 27 | 11 | வெ | பிர54-15 | உத்60 | சித்60 | ஆஷாடபகுளம் |
| 28 | 12 | சனி | துதி59-55 | உத்3-48 | சித்60 | அசூன்யசயன விரதம் |
| 29 | 13 | ஞா | திரி60 | திரு11-0 | அ11-0மர | திருதினஸ்பிருக் |
| 30 | 14 | திங் | திரி5-55 | அவி18-28 | சித்60 | விவாகம், பும்சவனம் |
| 31 | 15 | செவ் | சது11-58 | சத25-55 | மர60 | கடகாவி நா-59-35 |

(ஜூன்௴ column from row 17: 1930 ஜூலை௴)

| | | | |
|---|---|---|---|
| | செவ் ராகு | புதன் | சூரி குரு |
| | 17-மிது-புத<br>20-ரிஷ-செ<br>24-சிம்-சுக்<br>31-கடக-புத | | சுக் |
| சனி | | கேது | |

**Printed & Published by N. Munisawmi Mudaliar,**

**at the "Ananda Bodhini" Power Press,**

**Lawyer Chinnathambi Mudali St., Madras.**